# பெற்றோரைப்பற்றி!...

( ஒரு மொழியியற்சொற்பொழிவு )

உரைஞர் : ப. அருளி

[ வெளியீடு : 2 ]

தமிழின்த் தொண்டியக்கம் - புதுச்சேரி - 9.

முதற்பதிப்பு : மடங்கல்- ( ஆவணி )- தி. பி. 2020.
செப்டம்பர்- 1989.

*பதிப்பக முகவரி :*

**அறிவன் பதிப்பகம்**
காளிக்கோயில் தெரு,
தமிழூர்,
புதுச்சேரி - 9.

**பொறுப்போடு உழைத்து- இந் நூலை உருவாக்கிய நன்னெஞ்சங்களுக்கு ஒரு நன்றி தெரிவிப்பு**

❁ "பெற்றோரைப்பற்றி !..." என்னும் பெயரிய இந் நூலின் வடிவாக்கத்திற்குப் பல்லாற்றானும் துணை நின்று உழைத்து உருவாக்கம் செய்த தூய தொண்டுணர்வு சான்ற நன்னெஞ்சங்களாகிய திருவாளன்மார் : தமிழூர் - **சீனு. பற்குணன், கதிர்காமம்- சு. கோவலன் ( கோபால் ), தமிழூர்- இல. தமிழ்வேந்தன், அ. திருமுருகன், சு. பழனி** ஆகியோர்க்கு எம் தமிழினத் தொண்டியக்கத்தின் உள்ளார்ந்த நன்னன்றிகளைத் தெரிவித்து **மகிழ்கின்றோம்!**

❁❁ எப்போதும் போலவே- இந் நூல் உருவாக்கத்தில் பொருளைப் பொருளாக மதியாது- வேண்டவே வேண்டாமென மறுத்து- இப் பணிக்குத் துணை தர வேண்டியபோதெல்லாம் விரைந்து வந்து உழைப்புத் தந்த தமிழ் நெஞ்சத் தகைமைச் செல்வர் திருவாளர் **அர. சந்திரசேகரனார்க்கு** எங்களின் நிறைந்த நன்றிகளைத் தெரிவித்து உவக்கின்றோம்!

*-தமிழினத் தொண்டியக்கம், புதுவை- 9*

அச்சீடு :

**தமிழ் அச்சகம்**
55, வழுதாவூர்ச் சாலை,
தருமபுரி,
முத்தரையர்ப்பாளையம் (அஞ்சல்)
புதுச்சேரி - 9.

**விலை: 25/- உருவாக்கள்**
**( Rs : 25/- )**

ஓர் அன்புப் பெற்றோர்க்கு
அரிய படையல் !...

புதுச்சேரி மாநிலம் - ஐயன்குடிப்பாளையம்
என்னும் நல்லூரில்
வாழ்ந்திலங்கி வரும்

நேர்மையும்
உண்மையும் வாய்ந்த
பெரியவர், திருவாளர் : தெ. முனிசாமி ஐயா
அவர்களுக்கும்

பண்பும்
பாசமும் தோய்ந்த
அம்மையார், திருவாட்டி: ருக்குமணி முனுசாமி
அவர்களுக்கும்

“ பெற்றோரைப்பற்றி !... ”
என்னும் என்னின் இன்னூலைப்
பணிவன்புடன்
படையலிட்டு
மகிழ்கின்றேன்.

இன்னவண்ணம்,
அன்பு,
ப. அருளி

# கருவி நூற்பட்டி

1. அகநானூறு
2. அகராதி நிகண்டு
3. ஆசாரக் கோவை
4. இரகுவம்சம்
5. ஈடு
6. உத்தரகாண்டம் ( இராமாயணம் )
7. உபதேச காண்டம்
8. ஐங்குறுநூறு
9. ஐந்திணை ஐம்பது
10. கந்தபுராணம்
11. கம்பராமாயணம்
12. கலித்தொகை
13. களவழி நாற்பது
14. குறிஞ்சிப்பாட்டு
15. குறுந்தொகை
16. கூர்ம புராணம்
17. கோயிற்புராணம்
18. சங்கத்தகராதி
19. சித்தவைத்திய அகராதி
20. சிலப்பதிகாரம்
21. சிறுபஞ்சமூலம்
22. சிறுபாணாற்றுப்படை
23. சீகாளத்தி புராணம்
24. சீவகசிந்தாமணி
25. சுத்தானந்த பிரகாசிகை
26. சூடாமணி நிகண்டு
27. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி(மடலம்-1.பாகம்1)
28. சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி ( மடலங்கள் 6+1 )
29. சேதுபுராணம்
30. சொற்பிறப்பு ஒப்பியல் தமிழகராதி
31. தகுதி
32. தண்டியலங்காரம்
33. தணிகைப்புராணம்
34. தத்துவப் பிரகாசிகை
35. தமிழ் வரலாறு
36. தனிப்பாடல் திரட்டு
37. தாயுமானவ சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு
38. திணைமாலை நூற்றைம்பது
39. திரிகடுகம்
40. திருக்கோவையார்
41. திருக்குறள்
42. திருப்பாவை
43. திருப்புகழ்
44. திருமுருகாற்றுப்படை
45. திருவாசகம்
46. திருவெம்பாவை
47. திருவிளையாடற்புராணம்
48. தேவாரம்
49. தைல வருக்கச் சுருக்கம்
50. நற்றிணை
51. நன்னூல்
52. நாநார்த்த தீபிகை
53. நாமதீப நிகண்டு
54. நாலடியார்
55. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்
56. நீலகேசி
57. நெடுநல்வாடை
58. பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும்
59. பதிற்றுப் பத்து
60. பதினோராந் திருமுறை
61. பரிபாடல்
62. பழமொழி நானூறு
63. பன்னிரு பாட்டியல்
64. பிங்கலம்
65. பிரபுலிங்கலீலை
66. பிரபோத சந்திரோதயம்
67. பெரியபுராணம்
68. பெருங்கதை
69. பெரும்பாணாற்றுப்படை
70. புறநானூறு

71. புறப்பொருள்வெண்பாமாலை
72. மகாபாரதம்
73. மதுரைக் கலம்பகம்
74. மதுரைக் காஞ்சி
75. மணிமேகலை
76. முல்லைப்பாட்டு
77. யாழ்ப்பாண அகராதி
78. வின்சிலோவின் தமிழ்- ஆங்கில அகராதி
79. வெங்கைக் கோவை

---

## பயன்பட்ட பிற மூல நூல்கள்- அகராதிகள்

1. A Dravidian Etymological Dictionary (T. Burrow and M. B. Emeneau)
2. A Latin Dictionary (Lewis and short)
3. An Etymological Dictionary of the English language (Rev. Walter W. Skeat)
4. A Sanskrit- English Dictionary (Sir. M. Monier Williams)
5. Dictionary Telugu- English (Charles Philip Brown)
6. Greek- English Dictionary (Stuart Jones and Meckenzie)
7. Kittle's Kannada- English Dictionary
8. Linguistic survey of India- (Grierson)
9. Malayalam and English Dictionary (Rev. H. Gundert)
10. The Compact edition of the Oxford English Dictionary
11. The Practical Sanskrit- English Dictionary (V. S. Apte)
12. The primary classical language of the world (Prof. G. Devaneyan)
13. Tulu- English Dictionary (Prof. M. Mariappa Bhat)

---

## குறுக்க விளக்கம்

அக. நி : அகராதி நிகண்டு
அகம் : அகநானூறு
இரகு : இரகு வம்சம்
இராட் : இராட்டிலர் தமிழ்- ஆங்கில அகராதி
ஈடு : ஈடு
உத்தரரா. (உத்தர.) உத்தர காண்டம் உத்தரராமாயணம்
உபதேசகா : உபதேச காண்டம்
உயிரீற் : உயிரீற்றுப் புணரியல்
எ-டு : எடுத்துக்காட்டு
ஐங்குறு ; (ஐங்): ஐங்குறுநூறு
ஐந். ஐம் : ஐந்திணை ஐம்பது
ஒ. நோ : ஒப்பு நோக்குக !
கந்தபு : கந்தபுராணம்
கம்பரா : கம்பராமாயணம்
கலித் ; (கலி) : கலித்தொகை
களவழி; (கள.) ; களவழி நாற்பது
கி. பி. : கிறித்துவுக்குப் பின்

கி. மு : கிறித்துவுக்கு முன்
குறள் : திருக்குறள்
குறிஞ்சி; (குறி) : குறிஞ்சிப்பாட்டு
குறுந் : குறுந்தொகை
கூர்மபு : கூர்மபுராணம்
கோயிற்பு : கோயிற்புராணம்
சிலம்பு : சிலப்பதிகாரம்
சிறப்பு; (சிறப்.) : சிறப்புப் பாயிரம்
சிறுபஞ் : சிறுபஞ்சமூலம்
சிறுபாண் : சிறுபாணாற்றுப்படை
சி.வை.அ : சித்தவைத்திய அகரார்தி
சீவக : சீவகசிந்தாமணி
சூடா. நிக; ( சூடா. நி. ) சூடாமணி நிகண்டு
சூளா : சூளாமணி
செட். நா: செட்டிநாட்டு வழக்கு
செ. சொ. பி. : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி (மடலம்-1. பாகம்-1.)
செ. ப. க. அ. ( செ. ப. க. ) : சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி
சேதுபு : சேதுபுராணம்
சொ. ஒ. த. அ : சொற்பிறப்பு ஒப்பியல் தமிழ் அகராதி
ஞானவா : ஞானவாசிட்டம்
ஞானாமிர்த: ஞானாமிர்தம்
தணிகைப்பு : தணிகைப்புராணம்
தத்துவப் : தத்துவப் பிரகாசிகை
தனிப்பா. தி; (தனிப்): தனிப்பாடல் திரட்டு
தாயு : தாயுமானவ சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு
தி.மா: திணைமாலை நூற்றைம்பது
திரிகடு : திரிகடுகம்
திருக்கோ : திருக்கோவையார்
திருப்பா : திருப்பாவை
திருப்பு : திருப்புகழ்
திருமுரு : திருமுருகாற்றுப்படை
திருவா : திருவாசகம்
திருவிளை: திருவிளையாடற்புராணம்
திவ்: நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்
திவா : திவாகரம்
தேவா : தேவாரம்
தைலவ: தைல வருக்கச் சருக்கம்
தொல்: தொல்காப்பியம்
[இடை : இடையியல்
உயிர் : உயிர்மயங்கியல்
உரி : உரியியல்
எழுத் : எழுத்ததிகாரம்
களவு : களவியல்
கற்பி; (கற்.) : கற்பியல்
செய் : செய்யுளியல்
சொல் : சொல்லதிகாரம்
பெயரி : பெயரியல்
பொருள்; ( பொரு. ) பொருளதிகாரம்
மரபி : மரபியல்
விளி : விளிமரபு]
நச்:உரை: நச்சினார்க்கினியர் உரை
நற் : நற்றிணை
நன் : நன்னூல்
நாஞ். வழக்கு; ( நாஞ் ) : நாஞ்சில் நாட்டு வழக்கு
நாமதீப : நாமதீப நிகண்டு
நாலடி : நாலடியார்
நெடுநல் : நெடுநல்வாடை
பக் : பக்கம்
பதிற். பத் : பதிற்றுப்பத்து
பதினோ: பதினோராந் திருமுறை
பரிபா : பரிபாடல்
பள் : பள்ளர் வழக்கு
பழ : பழமொழி நானூறு
பன்னிருபா : பன்னிரு பாட்டியல்
பனம்பா : பனம்பாரனார்
பாரத : மகாபாரதம்
பிங் : பிங்கலம்
பிரபுலிங் : பிரபுலிங்கலீலை
பிரபோ : பிரபோத சந்திரோதயம்
பிரா. வழக்கு : பிராமணர் வழக்கு
புறம் : புறநானூறு
பு. வெ : புறப்பொருள் வெண்பாமாலை
பெருங் : பெருங்கதை

பெரும் : பெரும்பாணாற்றுப்படை
பேரா : பேராசிரியர்
பொருந : பொருநராற்றுப்படை
மதுரைக் கலம்: மதுரைக் கலம்பகம்
மதுரை : மதுரைக் காஞ்சி
மணி : மணிமேகலை
முல்லை : முல்லைப்பாட்டு
மே. கா : மேலுங்காண்க
யாழ். அக: யாழ்ப்பாண அகராதி
வெங்கைக் கோ: வெங்கைக் கோவை
வின்சிலோ : வின்சிலோவின் தமிழ்-ஆங்கில் அகராதி

---

## குறுக்க விளக்கம் ( ஆங்கிலம் )

Colloq : Colloquial
F. T. C. : The flora of the Tamilnadu, Carnatic
It : Italy
Pg : Portuguese
Skt : Sanskrit
Sp : Spanish
Vol : Volume

---

## இந் நூலுள் குறிக்கப்பெற்றுள்ள மொழிகளும்- கிளை மொழிகளும் ( பட்டியம் )

1. Abazinian
2. Abor
3. A- hi
4. A hom
5. Aimol
6. Ainu
7. Aka
8. Akkadian
9. Aka (ka)
10. A- ko
11. Anal
12. Andro
13. Angāmi
14. Ang- ku
15. Anglo- saxon
16. Annamese
17. Arabic
18. Arakanese
19. Arāmaic
20. Areti dialect of pashai
21. Armenian dialect of Gypsy
22. Assamese
23. Awadī
24. Awankari dialect of lahnda
25. Badaga
26. Badrawāhi
27. Bagātī
28. Bagēlì
29. Bāhing
30. Bālāti
31. Balti of Purik
32. Bānapari

33. Bāngarū
34. Banjōgī
35. Banpạrā
36. Basgali
37. Bashkarik
38. Basque
39. Bengali
40. Bhalesi dialect of west pahāri
41. Bihāri
42. Bili
43. Bodo (or) Bara
44. Botia ( Tibetan )
45. Brāhūi
46. Braj bakā
47. Bundēli
48. Burusaski
49. Bwe
50. Cameāli dialect of west pahāri
51. Cantonese
52. Central- pahari
53. Chairel
54. Chākmā
55. Chaldian
56. Cham
57. Chamba Lāhulī
58. Chameālī
59. Chāng
60. Charō tarī
61. Chattīsgarī
62. Chāurāsya
63. Chermiss
64. Chibālī
65. Chilāsi
66. Chilāsi of Dāh Hanū
67. Chliasi of Dras
68. Chinbōk
69. Chinbōn
70. Chingtāng
71. Chinese
72. Curahi dialect of west pahāri
73. Daflā
74. Dakinī
75. Dana
76. Danish
77. Danjonka
78. Dannī
79. Danu
80. Darāng
81. Dīmāl ( Dameli )
82. Dīmā- sā
83. Dōdā sirājī
84. Dodi (a dialect of kashmiri in Jammu )
85. Dumāki
86. Dūmi
87. Dungmāli
88. (Eastern-) Hindi
89. Eastern- pahari (or) kaskurā
90. East Frisian
91. Egyptian
92. En
93. English
94. Empēo
95. Estrian
96. Finnish
97. French
98. Gadba
99. Gādī
100. Gangoī dialect of Kumaunī
101. Garō, Achik
102. German dialect of European Gypsy
103. Ghāwī
104. Gheko
105. Gilgiti dialect of shina
106. Gisadi
107. Gondi
108. Greek
109. Gujarati

110. Gujurī of Hazara
111. Gul bahāri dialect of pashai
112. Guresi dialect of shina
113. Gyami
114. Gypsy- ( European )
115. Gypsy ( or ) Romani
116. Gypsy ( syrian )
117. Hallām
118. Haurpà
119. Hebrew
120. Hindi
121. Hindōstānī
122. Hirōi- Lamgāng
123. Hloke
124. Hlōtā
125. Hungarian
126. Icelandic
127. Indonesian
128. Iskasmi zēbakī
129. Italy
130. Jaipurī
131. Kabui
132. Kacchi
133. Kadu
134. Kāgatē
135. Kalāsa
136. Kaling
137. Kambū
138. Kāmtī
139. Ka Muk
140. Kanāsi
141. Kauanji
142. Kanauri
143. Kândesi
144. Kangoi
145. Kāngra
146. Kāngra sub- dialect of Dogri dialect of Panjabi
147. Kannada
148. Karenbyu
149. Karenni
150. Kariā
151. Kārwa
152. Kashmīrī
153. Kasī ( standard )
154. Kastwārī
155. Kātiyāwādī
156. Kerwārī- Santāli
157. Ketrāni
158. Kezāmā
159. Khasāli dialect of West Pahari
160. Kiutali
161. Kmer
162. Kōch
163. Kodagu
164. Kohistānì, dialect of Shina
165. Kohistāni, Garwi
166. Koirāo
167. Kolāmi
168. Kolwreng
169. Kōm
170. Kōnkani
171. Korean
172. Kōta
173. Kowar or Chitrāli
174. Kui
175. Kului
176. Kun
177. Kurux (or) Kuruk
178. Kuwi
179. Kwoireng
180. Ladaki of spiti
181. Lahnda of shahpur
182. Lahu
183. Lai
184. Lakhimpuri dialect of Awadhi
185. Lālung
186. Lambānī of Berar
187. Lambichong
188. Langrong

189. Lanten- yao
190. Lappish
191. Lāri
192. Lasi (or) Lechī
193. Late Greek
194. Limbu
195. Lisa ( or ) Yayin
196. Lisu
197. Lohōrōng
198. Lolo- Ni
199. Lo- lo po
200. Lü
201. Lusēī
202. Magahī
203. Magari
204. Maingoa
205. Maithili
206. Maiyā
207. Malay
208. Malayalam
209. Malto ( or ) Maler
210. Mālwi
211. Man
212. Manchatī ( or ) Patnī
213. Manchu
214. Manda
215. Mandarin
216. Mandēali
217. Man lan- tiēn
218. Manō
219. Man- ta- pan
220. Manyak
221. Mapauk
222. Marām
223. Marāti, Desī
224. Maru
225. Me- gyā
226. Meitei
227. Melanesian
228. Mewāti
229. Miao- tsu ( Hmōng )
230. Middle- English
231. Miri
232. Mōng Lwe
233. Mon- Khmer
234. Mopwa, Bilichi
235. Mopwa, Dermuha
236. Mordvin
237. Mō- sāng
238. Mo- so
239. Mru
240. Multānī
241. Munda
242. Mundārī
243. Munjāni (or) Mungī
244. Murmi
245. Nācherēng
246. Nāgpuri
247. Nāgpuriā
248. Naiki of Chanda
249. Namsangiā
250. Nepāli
251. Newārī
252. Nīmādī
253. Nung
254. Old High German
255. Old saxon
256. Oriyā
257. Ormurī
258. Oscan
259. Ostyak
260. Pādari
261. Padaung
262. Padi, pahri or pahī
263. Pahlvi
264. Palaung
265. Pangwālī
266. Panjābi ( Punjabi )
267. Parji
268. Pasai
269. Pasai- ( Eastern )
270. Pasai- ( Western )

271. Pē- Miao
272. Pengo
273. Pōguli
274. Portuguese
275. Polynesian
276. Pōtwāri
277. Pōwadi
278. Prakrit
279. Punchī
280. Pun- Samong
281. Pwo
282. Pwo, Bassein
283. Pwo, Maulmein
284. Rai ( or ) Jimdār
285. Rājastanī, Mārwāri
286. Rāmbāni
287. Rambāni dialect of Kashmiri ( in Jammu )
288. Rengmā
289. Rōdōng
290. Rong (or) Lepcha
291. Rumanian
292. Rūngchēngbūng
293. Sakai
294. Salon
295. Samoiede
296. Sān
297. Sāngpāng
298. Sanskrit
299. Sarikōlī
300. Sarpa
301. Savara
302. Savi
303. Sema
304. Semange
305. Sengmai
306. Sga
307. Shumashti
308. Siamese
309. Signi
310. Sihia
311. Sīna- Gīlgītī
312. Sindhi, Vichōlī
313. Sinhalese
314. Sin- hma Mapauk
315. Siripuria
316. Siripuria, (Eastern)
317. Siripuria of Cachar
318. Siripuria of Chittagong
319. Sirmaurī
320. Sōdōchi
321. Sōn
322. Sö (or) Kiyang
323. Spanish
324. Sumer- Oceanian
325. Sumerian
326. Swahili
327. Syriac
328. Sze (or ) Atsi
329. Tableng
330. Tādo
331. Tàkpà
332. Tangkul
333. Talaing
334. Tali
335. Tavoyan
336. Tauchi
337. Taungou
338. Taungyo
339. Tengsa
340. Tibetan
341. Tinauli
342. Tinauli of saltrange
343. Tīpurā
344. Tōrwāli
345. Tōtō
346. Tūlung
347. Turki
348. Vayu (or) Hâyu
349. ( Vernacular- ) Hindōstanī
350. Wa
351. Wachi

352. Wai- ala
353. Wāling
354 Wār
355. Wāsī- Veri
356. Welsb
357. (Western)- Hindi, Hindostani
358. (Western)- pahari Jaunsari
359. Wewaw
360. Yadwin
361. Yākā
362. Yeinba
363. Yin ( or ) Riang
364. Yintaba
365. Yudgā
366. Zayein



# என்னின் முன்னுரைப்பு

அமைதியாகத் தமிழ்த்தொண்டாற்றி அரிய விளைவுகளைத் தொடர்ந்து உருவாக்கிவரும் பைந்தமிழ்ப் பாசறையினரின் ( -எண்ணூர், சென்னை.) வேண்டுகோளுக்கு இணங்கி 9.1.89 அன்று, சென்னை-. ஐ. டி. சி. தொழிற்கழக அரங்கில் யான் ஆற்றிய இரண்டரைமணி நேர உரைப்பொழிவு இது!

சொற்பொழிவாகச் செய்தற்கு அடிப்படைக் குறிப்புகளாக யான் தொகுத்து வைத்த தாள்களை -ஒருங்குபடுத்தி ஒழுங்குபடுத்திச் சில்லிடங்களில் கருத்து விளக்கத்திற்கென ஓரிரு சான்றுகளை நிரல்பட வரிசைப் படுத்திக் கூட்டிக் கட்டுரை வடிவில் வார்த்தெடுத்த கையெழுத்துப் படிகளினின்று பதித்த அச்சுப்படிகளின் சிறுந்தொகுப்பே— இந்நூல் உரு!

இந்நூலின் இத்தகு உருவுக்குரிய கருவோ- ஆறேழாண்டுகளுக்கும் முற்பாடேயே எம் மூளைக் கருப்பையில் துருவியேறித் துயிலத் தொடங்கியது! புறத்தினின்று எம் கட்புலத்திலும் செவிப்புலத்திலும் படிவுற்ற கருத்துணவுகள்- கருப்பையிற் கிடந்த இக் கருவிற் படப்படக் கருத்-துகள் வளர்ச்சியுறத் தொடங்கியது. கருத்துகள் புகப்புகக் கருவும்- உருவுற்றுத் திருவேறி நிறைவுற்றது! பிறகுதான் இப்படிப் புறமுற்றது !

இந்நூற்குழந்தை புறம்பெயர்ந்து தாள்படுக்கையில் கிடக்கை கொள்ளுதற்கு முன்- சற்றேறக்குறைய ஆறேழாண்டுகள் அகப்பேறாகவே இது அடைப்புற்றுக் கிடந்தது ! கருப்பேறுற்று நாளைக் கணக்கிடாது மகிழ்விலேயே பூதித்துக் (பூரித்துக்) கிடந்துவிட்ட பிள்ளைத் தாய்ச்சியானவள்- இறுதிநேரத்தில் மருத்துவரிடம் தோராயமாகக் கருப்பேறு நாள் கணக்குக் கூறுவது போல- யானும் ஒரு ஆறேழாண்டுகள் என்று குத்துமதிப்பாக உங்கள் முன் கூறலாயினேன்.

இந்நூற்பேறு ஒரு குறைக்காலப் பேறன்று ; -முன்றக்கால நிறைப் பேறே என்பதைமட்டும் யான்- உங்களிடம் இக்கால் உறுதியுரைக்க முடியும்!

இன்றைக்கு இவ்வுலகின் மாந்தவினத்தில் நாம் ஒவ்வொருவரும் தனித்தனி உயிரிகள்! இப்படி நாம் மாந்தராக வளர்ந்து நிற்பதற்கு முன்னர் என்னென்ன வடிவங்களில் உயிரிகளாகப் படிப்படியாக

மலர்ச்சியும் வளர்ச்சியும் பெற்றுவந்துள்ளோம் என்பதை உயிரியலாரும் (Biologists) மாந்தரியலாரும் (Anthropologists) பல்வேறு கோணங் களில் திரிபாக்கக் கொள்கையின் முறையுண்மைகளாகத் தெளிவுறவும் வலிவுறவும் நிலை நிறுத்தியுள்ளனர் !

முன் தொடக்கத்தில் ஒற்றைப்புரையன் (One Cellular object) தோன்றியது ! அடுத்து, மிகச் சிறிய நுண்ணுயிரி- வகை தோன்றின ! அடுத்த படிநிலையில் புல்லிய புழு- வகை உயிரிகள் தோன்றின ! பிறகு, பல வகையினவான பூச்சிகள்- பறவைகள்- ஊர்ந்து செல்லும் உயிரிகள் தோன்றின ! ஊர்வன வகையினின்று அணில்- எலிகள் போலும் உயிரி கள் தோற்றங் கொண்டன ! அவ்வகை உயிரிகளினின்று தேவாங்கு போன்ற குரக்கின முதலுயிரிகள் (Lemurs) பிறந்தன ! தேவாங்கு- சிறு வகைக் குரங்கு- குரங்கு முதலியன படிப்படியாக வளர்வுற்றன !

குரங்கு (Monkey) தன் வளர்ச்சிப்பேற்றில் வால் தேய்வுறல் கொண்டு படிப்படியே வாலில்லாக் குரங்கு வகையாகத் (Ape) தோற்ற மாற்றப்பெற்று அலைந்தது ! வாலில்லாக் குரங்கு வகை- எண்ண வளர்ச்சியுற்றுக் கடுமையான கொட்டைகளை உடைத்து உட்பருப்புத் தோண்டித் தின்னும் திறம் பெற்று- நெற்றுடைப்பான் குரங்கு (Nut cracker man (or) Sinjathropose Boisi) என்னும் பெயரியதாக வளர்ச்சிப்பேறு உற்றது ! அந் நிலையினும் அது படிப்படியாக வளர்ச்சியுற்று ஓரளவுக்கு நிமிர்ந்து நிற்கவும் நன்கு நடக்கவும் பயின்று நிமிர்ந்த குரக்கு மாந்தன் (Pithecanthropos erectus) என்னும் நிலைக்கு உயர்ந்தது ! [ இங்கு மேற்குறிப்பிட்ட வாலில்லாக் குரங்கும்- நெற்றுடைப்பான் குரங்கும்- நிமிர்ந்த குரக்கு மாந்தனும் மாந்த உருவத்துக்கு மிக அண்மைப்பட்டு நிற்கும் தோற்றத்தால், மாந்தற் போலி (Anthropoid) என்றவாறு உயிரியியலார் சுட்டுவர். ]

இந்''நிமிர்ந்த குரக்கு மாந்தன்'' இறுதி நிலைப்பட்டு வளர்ச்சி யெய்திய வடிவமே இன்றைய மாந்தன் ! [ அதாவது- நீங்களும் நானும் பிறரும் ஆகிய நாம் அனைவரும் !... ]

இந் நிமிர்ந்த குரக்கு மாந்தன் இன வகைக்கு அடுத்த சாதி வகையார் நாம் ! ஆம் !... குரங்குச் சாதியினின்று வளர்ந்து மாந்தச் சாதியானவர்கள் நாம் !

இப்படி, நாம் ஒற்றைப் புரையனிலிருந்து மாந்தராகப் படிநிலை வளர்ச்சியில் வளர்ந்து வடிவெய்தி நிற்கும் இவ்வுண்மையை- அறிஞர் தார்வின் போன்றோர் விண்டு விளக்கிய இம்மெய் வரலாற்றை எங்குச் சென்று எப்படித் தெளிவாகக் கண்டு உணரவியலும்? ஆம்- இது இயலுவதே !

தாய்மைப் பேறுற்ற பிள்ளைத் தாய்ச்சி ஒருத்தியின் வயிற்றகத்துக் கருப்பையினுள் உள்ள கருத்தங்கல் நிலைத்தோற்றத்தினின்று, ஒரு கிழமையில் - ஒரு திங்களில் - இரு திங்களில் - முத்திங்களில் - அறு திங்களில் - எண்டிங்களில் - பத்துத் திங்களில் அல்லது ஒவ்வொரு நாள் முறையிலாகப் படிப்படியே தொடர்ந்து நேரில் முடிவுவளர்ச்சிவரை காணும் வாய்ப்பு நமக்கு நேருமாயின், - நாமே இவ்வுண்மையின் தெளிவை நன்கு அறியவும் உணரவும் இயலும் !

இதற்குப் பகரமாக- இன்றைய மருத்துவ ஆராய்ச்சி நிலையங்களின் காட்சிக் கூடங்களில்- கருவுருத் தொடங்கி, ஒவ்வொரு சிறுசிறு காலத்து வளர்ச்சிக் கூறுகளிலான அக்கருவுருவின் வளர்ச்சிப் படிநிலைகளை- அதனின் நுண்ணுயிரியன்ன தோற்ற நிலையை- அதனின் புழுத் தோற்ற நிலையை- அதனின் எலிக்குஞ்சுபோலும் தோற்ற நிலையை- அதனின் நுண்குரங்கு போன்ற தோற்ற நிலையை- அதனின் வாலில்லாக் குரங்குத்தோற்ற வகையை- அதனின் முடங்கிக் கிடக்கும் முதிர்குரங்கின் தோற்ற நிலையை- இறுதியில் அதனின் மாந்தப்பிஞ்சு வடிவமாகி நிற்கும் எழில் தோற்ற நிலையைத்- தனித் தனியான ஆடிப் புட்டில்களில் ( glass- bottles ) மருந்துநீர்மம் நிறைத்து அவற்றைக் கால நிரல்படி உள்ளடைத்து மருத்துவ இயலார் காட்சிப் படுத்தியிருப்பதை நாம் உற்று நோக்குவோமேயானால்- இத் திரிபாக்கக் கொள்கை (Evolution theory) யில் உள்ள உண்மைகளின் உறுதியை நாம் தெளிவாக உணரலாகும்.

உயிர்த் தோற்ற வரிசையில் உள்ள படிப்படியான வளர்ச்சிகளை- அவற்றின் மெய்த் திரிபாக்க உண்மைகளைக் கண்ணாடிப் புட்டில்கள் தரும் காட்சியாலேயே தெளிய முடிவதைப் போன்றே- நம்மாலும் நம் மொழியைத் துருவி ஆராய்கையில், - இருக்கின்ற சொல்வடிவங்களும் அதனின்று கிளைத்தெழுந்த இனச் சொல் வடிவங்களும் தம்மைத் துலக்கிக் காட்டும் காட்சிகளிடையே அவற்றின் கருத் தோற்றங்களையும் செவ்விதின் காண இயல்கின்றது !

சொற்களின் வடிவங்களே அவற்றின் முந்தியன்ற தொல் பழங் காலப் பயன்பாட்டு நிலைகளையும் விளக்குகின்றன ! தமிழ் ஓர் இயற்கை மொழியாகப் பல்லாயிரமாண்டுகளாக வளர்ச்சியுற்று வந்திருக்கின்ற உண்மைகள் சொல்லமைப்புகளிலேயே துலங்க ஒளிர்கின்றன ! இதன் இயல்பொழுங்குகள்- படிநிலைவளர்ச்சிகள் பிற மொழிகளில் கட்டாயமாக இவ்வண்ணங் காணவியலாதன !

இத் தமிழ்ச் சொற்கள்- உலக மக்களின் கருத்துப் பரிமாற்றங் களுக்கெனக் கொடுத்திருக்கின்ற கொடை மிகப் பெரியது ! மிகப் பரந்தது ! மிக நெடுங்காலமாகத் தொடர்ந்து வந்த வரலாற்றையும் உடையது !

மானமற்ற, போர்க்குணமற்ற, தந்நலங்கெட்ட, சிந்தனை கெட்ட நம்மின் பல்வகைக் கீழ்மைப் போக்குகளால்- நாம் நம்மையே ஒடுக்கிக் கொண்டோம்! நம்மவரையே தாழ்த்தி நின்றோம்! நம்மவற்றையே புறக்கணித்துத் தவிர்த்துப் புதை குழியிலிட்டு வந்தோம்! நமக்குள்ளயே உட்பகைத்தோம்! நம்மவரையே நசித்தோம்! நம்மையே காட்டிக் கொடுத்தோம்! நாமே படிப்படியே கெட்டு வந்தோம்! கெட்டுக் கொண்டும் வருகின்றோம்!

நாம் நம்மை மீட்டுக் கொள்ள இவ்வுலகிலேயே இன்றைக்கிருக்கும் திறஞ் செறிந்த மீட்புக் கருவி, தமிழ்தான்! நம்மிடம் இருக்கும் இழி நிலைகளைத் தகர்த்தெறியவல்ல நல்ல படைக் கருவியே, தமிழ் ஒன்று தான்! நம்மிடமுள்ள பூசல் புரைகளைத் தூரத் தள்ளி விட்டு நம்மையே நாம் ஒன்றிணைத்துக் கொள்ள நம்மிடமிருக்கும் உயிர்ப்பு சான்ற இணைப் பாற்றல்மூலம்- தமிழ் மட்டுந்தான்! நம்மை மீட்கவும்- காக்கவும்- உயர்த்தவும் நம்மிடம் தமிழ் என்ற ஒன்றே இன்று நின்றுள்ளது!

இத் தமிழின் சிறப்பியல்புகள் யாவும் நம் மக்கள் முன் விளக்கமாகப் பட்டியலிடப் பெறவேண்டும்! அதற்குத் தமிழ் அறிஞருலகம் தன்மானத் தொடும்- தம் இன மக்கள் என்ற பாசவுணர்வொடும்- பல்வேறு நிலை களில் புதைவுற்றுக் கிடக்கும் நம்மின் மொழி பற்றிய மெய்க் கூறுகளை வெளிக் கொணர்தற்கென உழைப்பெடுக்க வேண்டும்! அதனை நம்மவர் உணருமாறு அனைத்திடங்களிலும் உரக்க உரைக்க வேண்டும்! அறிவும் உணர்வும் வாய்ந்த உண்மையாளர் யாவரும் இதற்கெனத் தத்தம்மின் கடன்களையும் பங்குகளையும் தந்தாக வேண்டும்!

நம் முந்தையோரின் ஆற்றலும் அறிவும் தமிழில் நன்கு படி வெய்தியுள்ளன! அவர்களின் வாழ்வியல் போக்குகள்- நோக்குகள்- சீர்மை கள்- சிறப்புகள் யரவும் அவர்கள் உருவாக்கிய சொற்களின் அத்துணை ஒலிவெளிப்பாடுகளின் நெளிவு சுளிவுகளிலுங் கூட ஆழப் பதிந்துள்ளன!

ஈடிணையற்ற நம் முந்தையோரின் உணர்வு வளர்ச்சியை- அதன் முந்தியன்மையை எண்ணிப் பார்த்தற்கும்- அவர்களின் உருவாக்கங்கள் உலகின் மிகப்பல்வேறிடங்களில் பதிவெய்தி இன்றும் உயிர்க்கும் போக்கு களையும் கண்டு கொண்டு விண்டு விளக்கமெய்தி விழிப்பெய்துவதற்கும் உரிய வகையில்- **தாய் தந்தையர்** குறித்த தொடக்கச் சொற்களில் சில வற்றை உங்கள் அறிவுப் பார்வைக்கு முன் பரப்பி வைத்திருக்கின்றேன். படித்துப் பார்த்துப் பயனும் விழிப்பும் எய்த விழைகின்றேன்.

அன்பன்,
ப. அருளி

—0—

# பெற்றோரைப் பற்றி!...

" ஒங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்- ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ் "

— என்றவாறு தண்டியலங்காரத்தின் உரை மேற்கோளாக ஒரு வெண்பா குறிக்கப் பெற்றுள்ளது !

இவ் வெண்பாவின் ஈற்றடியில் உள்ள பொருட்சாறம் ஓர் ஆழ்ந்த பேருண்மையைச் சுட்டும் அருமைப்பாடு உடையதாகும் ! உரைத்த பாவாசிரியரின் தெளிந்த உணர்வை இத் " தன்னேர் இலாத " (- தனக்கு நிகர் இல்லாத- ) என்னும் அடைத்தொடர் விளக்கமாக உணர்த்தி நிற்கின்றது. இப் பொருள் அடைத்தொடர்- உண்மை அடைத்தொடராகத் திகழ்கின்றமையை- மொழியியல் நோக்கில் பிற உலக மொழிகளில் தலை சிறந்தனவாகவும்- பழமை வாய்ந்தனவாகவும் பட்டியலிடப் பெற்றுள்ள சில மொழிகளின் அமைப்புக் கூறுகளோடு ஒப்பிட்டுக் காண்கையில் கலக்கமறத் துலக்கமுறலாம் !

இந்தியநாடு என்று இன்று அழைக்கப்பெறும் பழைய நாவலந் தீவாகிய இத் துணைக் கண்டத்துள் ஆயிரத்துக்கும் மேற்பட்ட மொழிகள் (தோராயமாக 1652 மொழிகள்) ஒலியுயிர்ப்புறுகின்றன! இத்த குவியல் நிலையைக் காணும் உலக மொழியாசிரியர்கள், இந்நாடு மொழிகளுக்கான ஓர் அருங்காட்சியகம் (Museum of languages) என்றவாறும் கருதுகின்றனர்! தமிழ்நாட்டில் உள்ள நீலமலையை உலா வந்தாலே போதும்!- தமிழிய மொழிகளின் புய்ந்துபோன காட்சிகளை அங்கு ஒலிவழி உணர்ந்தே உண்மை தெரிய இயலும்!

இந்தியக் குடிமதிப்பு அறிக்கையின்படி (Census report) திரவிடக் கிளைமொழிகளாக 101 மொழிகள் காணப்பெறுகின்றன! மொழி என்னும் தகுதிப்பாட்டை உடையனவாகத் தென் திரவிடத்தில் (South Dravidian group) இருபது மொழிகளும்- நடுவண் திரவிடத்தில் (Central Dravidian group) பதினைந்து மொழிகளும்- வட திரவிடத்தில் (North Dravidian group) ஐந்து மொழிகளும் கொள்ளப் பெறுகின்றன! இவற்றின் மொத்தத் தொகை நாற்பது ஆகும்.

வடதிரவிட மொழிகளுள் ஒன்றான பிராகுவி மொழி நமக்கு இன்றைக்கு அயல் நாடாகவுள்ள பாக்கித்தானத்தில் இன்றும் பயிலப் பெறுகின்றது. இவ்விருபதாம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டாகிய 1901-இல் எடுத்துள்ள குடிமதிப்பு அறிக்கையின்படி- அங்கு இம் மொழியைப் பேசியோரின் தொகை 48,589 என்னும் எண்ணிக்கையினதாகும்!

இன்றைய அளவில்-தமிழிய மொழிகளாகிய திரவிட மொழிகளைத் தோராயமாக 17 கோடி மக்கள் பேசுகின்றனர். இத் தொகையில் தோராயமாக நாலரைக் கோடி மக்கள் தமிழ் மொழியைப் பேசுகின்றனர். பேச்சுக்குப் பேசுகின்றனரேயல்லாமல்- நம் மொழி என்ற உள்ளுணர்வோடும் உவப்போடும் உரிய மதிப்போடும் இம் மொழியைக் கருதுவது அரிதாயுள்ளது!

தமிழினின்று முதன் முதற் பிரிந்து தனிப்பட்ட மொழி தெலுங்கு மொழியாகும். அது திரிபெய்திய காலம் தோராயமாக கி. மு. 1500 என்னும் கால அளவினதாகலாம் என்பார் பர்வர்ணர். (காண்க: தமிழ் வரலாறு: பக்கம்: 250.)

தெலுங்க நாட்டிற்குத் தமிழரிட்ட முதற்பெயர் '' வடுகு '' என்பதாகும். '' வடதிசை மருங்கின் வடுகு வரம்பாகத் தென்றிசையுள்ளிட்டெஞ்சிய மூன்றும் '' என்னும் சிறுகாக்கைப்பாடினியாரின் பாவரியினிடையிலுள்ள ''வடுகு'' என்பது வடவெல்லையிலுள்ள வடுக நாடாகிய தெலுங்க நாட்டைச் சுட்டிய பழம்பெயராகும்.

'' வடகு '' என்னும் செந்தமிழ்ச் சொல்லிலுள்ள ஈற்றொலியாகிய உகரவுயிருக்கு ஏற்ப- முந்திநின்ற அகரவுயிரானது தன்னைத் திசைத்து இசைத்துக் கொண்ட உயிரிசைவு மாற்றத்தால் ( Harmonic sequence of vowels )- '' வடுகு '' என்னுமாறு வடிவெய்தியுள்ளது. (வடகு > வடுகு)

வடுக நாட்டார் '' வடுகர் '' என்னப் பெற்றனர்.

ஒ. நோ : 1. '' முரண்மிகு வடுகர். '' ( அகம் : 281 : 8 )
2. ''குல்லைக் கண்ணி வடுகர்'' ( குறுந் : 11 : 5 )
3. ''துவன்று நிலை வடுகர்'' ( அகம்: 295 :15 )

இன்றைய திருப்பதியாகிய திருவேங்கடம்- அன்றைக்கு '' வடவேங்கடம் '' என்றவாறு குறிக்கப் பெற்று வந்த நிலையில் உள்ள தெளிவான் திசைச் சுட்டல் நன்கு கவனிக்கத் தக்கதாகும்.

காண்க : '' வடவேங்கடம் தென்குமரி ஆயிடை- தமிழ் கூறும் நல் உலகத்து '' ( தொல். சிறப். பனம்பா : 1-3 )

திருவேங்கடத்துக்கு வடபாலிருந்தமையின் அந் நாட்டார் வடுகர் என்னப் பெற்றமையை, '' வட வடுகர் வாளோட்டிய ''- என வரும் புறநானூற்று வரியின் கண்ணுள்ள '' வட வடுகர் '' என்னும் அடையடுத்த பெயர் ( புறம் : 378 : 2 ) ஐயமறச் சுட்டும்.

வடுகரின் நாடானது '' வடுகர் தேயம் '' என்றவாறும் சுட்டப் பெற்றது. ( காண்க : '' நாட்பலி கொடுக்கும் வால்நிணப் புகவின் வடுகர் தேஎத்து '' ( அகம் : 213 : 7-8 ).

அவ் வடுகர் தேயம் '' வடுகு '' என்றவாறும் குறுக்கச் சுட்டிய வழக்கிருந்தமையை முன்னர்ச் சுட்டிய '' வடதிசை மருங்கின் வடுகு ''

என்னும் சிறுகாக்கைப்பாடினியாரின் பாட்டுவரியிடையிலுள்ள பதிவும் ஆவணமாகி நிற்கின்றது.

கொடுந் தமிழாக முன்னர் வழங்கிய வடுகு மொழி அந் நிலையைத் தாண்டிப் பிரிந்து தனித்துத் தெலுங்கு மொழியாகியது.

பண்டைய செந்தமிழ் வழக்கில் இதனைச் சொல்வதானால் மொழி பெயர்வுற்றது என்னலாம்.

ஒரு மொழியானது திடுதிப்பான முறையில் விரைய மாறிப் போகாது ! பையப் பையவும் படிப்படியாகவும் காலப் போக்கில் அதுவே வேறொன்றாகி மாற்றமெய்துதற்கு வழியுண்டு. அம் மாற்றமுறுதலே " மொழி பெயர்தல் " என்பதாகும்.

இவ்விடத்தில் " பெயர்தல் " என்னும் சொல்லின் பொருட்சாறம் ஆழ்ந்து கவனித்தற்குரியதாகும் !

பெயர்தல் : பிரிதல் ( ஒ. நோ : " நிலம் பெயர்ந்து உறைதல் " ( தொல். பொருள் : 169. ); பிரிந்து இடம் மாறுதல்; இடம் விட்டு மாறுதல்.

[ போகுதல், மாறுதல்; பிறழ்தல், சிதைவுறுதல், இணைப்பு நெகிழ்தல், மீளுதல், அசையிடுதல், சலிப்படைதல், கூத்தாடுதல், பணம் நடைமாற்றங் கொள்ளுதல், தண்டலாதல் என்பன இச் சொல்லுக்கான பொருள்களாக பயில்வில் உள்ளனவேனும்- அவை பொருள்விரிவு ( Semantic expansions ) எய்தியனவாகும் என்னும் உண்மை உற்று நோக்கின் புலனாகும் !. ]

" பெயர்ப்பு " என்பது பெயரச் செய்கையைக் குறித்தலையும்,- " பெயர்ச்சி " என்பது இடம் மாறுகையைக் குறித்தலையும்,- " பெயர்த்து நடுதல் " என்பது ஓரிடத்தினின்று ஒன்றைப் பிடுங்கிப் பிரிதோரிடத்தில் நடுதலைக் குறித்தலையும்,- " மொழிபெயர்த்தல் " என்பது ஒரு மொழியிலுள்ள பொருட்சாறத்தை அப் பொருட்பாடு துலங்க,

விளங்குமாறு பிறிதொரு மொழியில் பெயர்த்தெடுத்துப் பதித்தலைக் குறித்தலையும் இவ்விடத்தில் கருதுதல் வேண்டும்.

"பெயர்த்தெழுதுதல்"- என்னும் வினையானது, படிவரைவாக அல்லது பகர்ப்புவரைவாக மீளவும் ஒன்றைப் பதிப்பாகக் குறித்தலைக் குறித்தலையும் இவ்விடம் கருதிப் பார்க்கவேண்டும்.

"பெயர்த்தும்" என்னும் சொல்- 'பின்னும்' என்னும் பொருள் படுதலையும், "பெயர்ந்து" என்னும் சொல்- 'மறுபடியும்' என்னும் பொருள்தருதலையும், "பெயரப் பெயர" என்னும் அடுக்குத் தொடர் யாழ்ப்பாண வழக்கில்- மீண்டும் மீண்டும் என்னும் பொருள்பட வழங்கு தலையும் உற்று நோக்கின் "பெயர்தல்" என்னும் சொல்லுக்குள்ள பொருட்சாறம் நமக்குத் தெளியப் புலனாகும்.

"புய்"- என்னும் பிரிவுக் கருத்து மூலவேரின் ஒருபுடைத் திரிபான "பிய்" என்னும் பக்கவேரின் அடுத்த படிநிலைத் திரிபு- "பெய்" என்பதாகும். (புய் > பிய் > பெய்)
பெய் + அர் > பெயர் = பிரி; இடம்மாறு.

ஒரு பொருளைச் சுட்டுவதற்கென்று உள்ள குறியீட்டுச் சொல் லானது- "பெயர்" என்னப் பெற்றமையின் கருத்துச் சாறத்தை நன்கு ஆழ்ந்து சிந்திக்கையில் மிகவும் வியப்பு ஏற்படுகின்றது. பொதுப்படக் காண்கையில்- எப் பொருளும் வேறொன்றன் புடைபெயர்ந்த வடிவாக உள்ளமையால்- அதனைச் சுட்ட நேர்கையில் அவ் வேறொன்றன் அடிப்படையிலேயே கருத்தையும் பெயர்த்து வேறுபடக் குறிக்கவேண்டி யிருத்தலான்- அச் சுட்டல் குறிப்பானது பெயர் என்றவாறே பெயர் பெறுவதாயிற்று! அதாவது- பொருட் பெயர்வே- (கருத்துப் பெயர்வே) பெயர் என்றவாறான சொல்லமைவுக்கே காரணக் கரு ஆயிற்று!

ஒருவனுக்குரிய பெயர்- அவுனின் பிறங்கடையினருள் முதலா மவனாகிய மகனுக்குப் பிறந்தவனாகிய மகனுக்கும்- அல்லது- மகளுக் குப் பிறந்தவனாகிய மகனுக்கும் சுட்டப்பெறும் தமிழின வழக்கத்தால்- பாட்டனாகிய அவனின் பெயரினை உடையவன் "பெயரன்" என்னப் பெற்றான். "பெயரன்" என்னும் பெயர் காலவட்டத்தில் "பேரன்" என்றவாறு செப்பத் திரிபெய்தி வழங்குகின்றது.

ஒ. நோ : 1. தந்தை பெயர்ன் = தன் தந்தையின் பெயரினையுடைய வனாகிய மகன்.
" தந்தை பெயரன்...... சிறு தேருருட்டுந் தளர் நடை "
( ஐங்குறு : 403. )

2. எந்தை பெயரன் = என் தந்தையின் பெயர் தாங்கிய என் மகன்.
" எந்தை பெயரனை யாங் கொள்வேம் " கலித் : 81.

இன்னவண்ணமே- ஒருத்திக்குரிய பெயரும் மகனின் மகளுக்கும்- அல்லது- மகளின் மகளுக்கும் சுட்டப்பெறும் இம் மண்ணின் வழக்கத்தால் பாட்டியாகிய அவளின் பெயரினை உடையவள் பெயர் + (த்) + தி > பெயர்த்தி என்னுமாறு பெயர் பெற்றாள். " பெயர்த்தி "- என்னும் சொல், பேர்த்தி என்றவாறு திரிபடைந்து இன்று " பேத்தி " என்றவாறு அழைக்கப் பெறுகின்றது.

யாழ்ப்பாண வழக்கில்- " பெயரன் " என்பது அப் பெயருக்கே உரிய பாட்டனையும், " பெயர்த்தி " என்பது அப் பெயருக்கே உரிய பாட்டியையும் சுட்டி நிற்கின்றன.

அடியெடுத்துப் பெயர்த்து வைத்தலைக் குறிக்கும் " பெயரும் " என்னும் சொல்,- " பேரும் " என்றவாறு திரிபடையும் உண்மையை- " பொருதகர் தாக்கற்குப் பேருந் தகைத்து " ( குறள் : 486 ) என வரும் குறட்பாச் செய்தியுள் தெளியக் கிடத்தலில் காணலாம்.

வேற்றுப் புலத்தினின்று பெயர்ந்து இங்கு வந்த மக்கள் " கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள் " (சிலம்பு : 5 : 11) என்ற வாறு சிலப்பதிகாரத்துள் சுட்டப்பெறுகை நன்கு கருதத்தக்கதாகும்.

இனி, " மொழிபெயர் தேயம் " என்னும் சொற்றொடருக்கு வருவோம் !

தமிழினின்று முதன் முதலில் பெயர்ந்து சென்று- பிரிந்து படிப் படியே தனிப்பட்ட மொழி " வடுகு " என்னும் தெலுங்கு மொழி யாகும். இம் மொழி வழங்கிய நாட்டையே முதன்முதலில் " மொழி

பெயர் தேயம்'' என்றவாறு தமிழர்கள் வேறுபடுத்திச் சுட்டத் தொடங்கினர்.

1. ''துவன்று நிலை வடுகர் ........ மொழிபெயர் தேஎம்''
(அகம் : 295 : 15-17)
2. ''வடுகர் முனையது ......... மொழிபெயர் தேஎத்தராயினும்''
(குறுந் : 11 : 5-7)

''பனிபடு சோலை வேங்கடத் தும்பர்
மொழிபெயர் தேஎத்தர்''- என்றவாறு அகநானூற்றில்

வரும் (21 : 8) குறிப்பு — குறிப்பாக, வடுக நாடாகிய தெலுங்க நாட்டையே தெளியச் சுட்டுவதாகும்.

வடுகாகிய தெலுங்க நாட்டையடுத்து - மற்றைய தமிழிய மொழிகளைப் பயின்ற திரவிட நாடுகளையும் ''மொழிபெயர்தேயம்'' என்ற சொல்லாலேயே பொதுப்படச் சுட்டத் தொடங்கினர்.

(காண்க :

1) ''தமிழ்கெழு மூவர் காக்கும்
மொழிபெயர் தேஎத்த பன்மலை இறந்தே''
(அகம் : 31: 14-15)
2) ''மொழிபெயர் தேஎத்தராயினும்'' (அகம் : 211 : 8)
3) ''மொழிபெயர் தேஎம்'' (அகம் : 67 : 12)
4) ''மொழிபெயர் தேஎத்தோர் ஒழியா விளக்கமும்''
(சிலம்பு : 6 : 143)

வேங்கடத்திற்குத் தெற்கில் தொல்காப்பியர் காலந்தொட்டு தமிழ் மொழி மட்டுமே வழக்கிலிருந்தது.

(காண்க :

1) ''வடவேங்கடந் தென்குமரி
**ஆயிடை**
தமிழ் கூறு நல்லுலகத்து''
(தொல். சிறப். பனம்பா : 1-3)

2) "நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு" (சிலம்பு: 8: 1-2)

என்ற இளங்கோவடிகளின் ஆவணப்பதிவு வரிகளுக்கு உரை கூற வந்த அடியார்க்கு நல்லார், "வடதிசைக்கண் வடுகொழிந்த திரிபுடை மொழி பலவுளவாகலான் மலையெல்லை கூறி ஒழிந்த திசை மூன்றிற்கும் திரிபின்மையாற் கடலெல்லை கூறினாரெனினுமமையும்" என்றவாறு குறிப்பிடுகின்றமை நமக்கு மிகுநனி தெளிவை அளிக்க வல்லதாகும்.

தொல்காப்பியர் காலத்தில் தெலுங்கு கொடுந்தமிழாயிருந்தது! கன்னடம் தோன்றவேயில்லை! வடவேங்கடத்தினின்று குமரிவரை செந்தமிழ் மட்டுமே வழங்கி நின்றது.

"தமிழ்"- என்னும் மிக முது பழஞ்சொல்லானது புலம் பெயர்ந்து வந்த அயலவர் பலராலும் பல்வேறு வகையில் திரித் தொலிக்கப் பெற்றது.

சில சான்றுகள்: (1) 'பெரிப்ளுசு' என்னும் கிரேக்க நூலில்- (கி. மு. நான்காம் நூற்றாண்டு).
தமிழ் > தமிரய்.
(2) யுவென் சாங் (கி. பி. 7- ஆம் நூற்றாண்டு சீன நாட்டுச் செலவர்.)
தமிழ் > தெஹி- மொ- லொ.
(3) மகாவம்சம் (அறிவன் மத நூல்) (பாலி.)
தமிழ் > தமிலொ.

"தமிழ்" என்னும் தூய்தமிழ்ச் சொல்லின் திரிபு வடிவ வளர்ச்சி முடிநிலையே "திரவிடம்" என்பதாகும் :

தமிழ் > தமில் > தமில > த்ரமில >
த்ரமிள > த்ரமிட > த்ரவிட >
த்ராவிட > திராவிட > திராவிடம் > திரவிடம்.
[ தமிழ் > ( தமில் ) > தமில > த்ரமில் ( த்ரமிள )
ஒ. நோ : பவளம் > ( Skt ) ப்ரவாள
கமுகு > கமுகம் ( Skt ) க்ரமுக. ]

த்ரமில ( த்ரமிள ) என்னும் முந்தைய திரிபு வடிவங்களுள் ஒன்று- கி. பி. 1573- வாக்கில் திபெத்திய மொழியில் தாரநாதர் எழுதிய '' இந்தியாவில் புத்த மதத்தைப் பரப்பிய வரலாறு'' என்னும் நூலில் காணப்பெறுகின்றது. '' த்ரமிட '' என்னும் அடுத்த திரிபு வடிவம் வராகமிகிரரின் '' ப்ரகத் சம்கிதா '' என்னும் நூலின் சில கையேட்டுப் படிகளில் காணக்கிடப்பதாகப் பண்டாரகர். கெர்ன் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

'' தமிழ் '' என்னும் சொல்லினின்று எழுந்த திரிபு வடிவங்களின் வளர்ச்சியே '' திராவிடம் '' என்ற சொல்லாகும் என்பதை- மொழி ஞாயிறு பாவாணர் அவர்கள் தம் நூல்களுள் அழுத்தமாகக் குறிப் பிட்டுள்ளார்.

இவ்விந்திய நாட்டிலும்- இதற்கு அண்மை அயல்நாடான பாக்கித் தானத்திலும் வழங்குகின்ற நூற்றுக்கும் மேற்பட்ட தென்-நடுவண்-வடல் திரவிட மொழிகளுக்கும் அவற்றுக்குட்பட்டுள்ள குறுங்கிளை மொழி களுக்கும் தாயானதும் தன்னகக் கருவில் கேடுபாடடையாத தூய்மொழி யானதுமான தமிழ்மொழியை- உலகம் சரிவரப் புரிந்து கொள்ளுவதற் குரிய வசதிப்பாட்டை இன்றும் நாம் முறைப்பட ஏற்படுத்தவில்லை!

தமிழகத்தில்- திரவிடமொழிகள் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்ட பலரிற் சிலர்-வழி வழியர்க இவ்வினம் சூழ்ச்சியால் ஏய்க்கப் பெற்றுக் கருத் தேற்றப்பட்ட கடிவாளப் போக்கின் மனத்திசைவையும் - மயக்கப் படிவையும் தாமும் தவிராது பற்றிநின்று, ஆரியத்தைப் பற்றியும் ஆரிய மொழியைப் பற்றியுமான மதிப்புணர்வுப்பான்மையை நெஞ்சிலும் அறிவிலும் நிறக்கச் சுமந்தவாறு தத்தம் ஆய்வுகளை நிகழ்த்தி வந்தமையால்- பல முடிவுகளைத் தாறுமாறாகவும் ஏறுமாறாகவும் மாறு படுத்தியும் வேறுபடுத்தியும் கூறுபடுத்தியும் குழப்பியுள்ளனர்!

தமிழ் மொழியைப் பற்றிய உண்மைத் தகுதியை உலகுக்கு அறிவிக்கும் முயற்சிப் போக்கைத் தம் ஆய்வில் மேற்கொள்ளாது- பதவிப் பேற்றுக்காகவும் வயிற்றுச் சோற்றுக்காகவும் விளைந்தாற் போன்ற பொது ஆய்வுகளையே அவர்கள் புறம் பெயர்த்திருக்கின்றார்கள்.

அதே நேரத்தில்- தமிழ் நாட்டின் திரவிட மொழியியல் அறிஞரிற் சிலர் தம் திரவிட மொழிகளின் ஆராய்ச்சி வழியாக- மதிக்கத் தகுந்த ஓர் இருப்பிடத்தையும் அதற்குரிய கணிசமான வலிவையும் தமிழுக்குத் தேடித் தர முயன்ற முயற்சிகளில் பெரிய வெற்றிகளைப் பெற்றுள்ளமையையும் நாம் மறுத்துவிடவோ- மறைத்துவிடவோ அல்லது மறந்துவிடவோ இயலாது!

அயலக மொழியறிஞர்கள் ஆங்காங்குள்ள மொழிகளில் தாம் கண்ட செய்திகளைத் தொகுத்துப் பகுத்தாய்ந்து வகைப்படுத்தியுள்ள பல் வேறு நெறிமுறைகளும் வரையறைகளுமான கண்ணாடிகளை ஈண்டுள்ள அறிஞர்களிற் சிலர் தத்தம் கண்களில் மாட்டிக் கொண்டு- பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே முற்றிய வளர்ச்சியெய்திய இலக்கியச் செம் மொழியாகிய தலைசிறந்த தமிழை அகம் நோக்காது புறம்பார்த்தே தரங்குறித்து வருகின்றமையால்- தமிழின் மெய்த்தகைமையானது உலகுக்குச் சரிவரப் புலனாகாமற் கிடக்கின்றது.

பிற அறிவுத் துறைகளிற் போன்றே- மொழியியல் துறையிலும் சமற்கிருதச் சார்பு மொழியியலார் வளம் பெற்றுப் பல்கிக் கிடக்கின்றமை யால்- அன்னோரால் தமிழின் ஒண்மையுண்மைகள் திட்டமிட்டு ஒளிக்கப் படுகின்றன !

தமிழைத் தவிர்த்த பிற திரவிட மொழிகளில் உருப்பெறும் மொழியியலாளரிற் பலரும் தமிழ் பற்றிய உண்மைகளை உணர விரும் பாமல்- உணர்ந்தும் அவற்றைப் புறம்படுத்த விரும்பாமல்- அவ்வவரும் ஒரு போகான புறக்கணிப்பு நிலையொன்றை வேண்டுமென்றே மேற் கொண்டு வருகின்றனர் !

தமிழ் நாட்டில்- தமிழ வயிற்றில் பிறந்து தமிழக் குருதியோடும் உடம்பினராய மொழியியலாரிற் பலர்- பரந்துபட்ட மனவளப்பாங்கின ராகவும்-நடுநிலை ஆய்வராகவும்- உலகப் பார்வையை உளங்கொண்ட நோக்கினராகவும் தங்களைக் காட்டிக் கொள்ளும் போலிப் பாங்கில் தமிழை ஏதோ பொதுவான மொழிகளுள் ஒன்று என்பது போன்ற அள விலேயே குறிப்பிடுதலிலும் ஆய்தலிலும் பொத்தாம் பொதுவாக ஈடு பட்டுப் பிழைக்கின்றனர்.

தமிழகத்திற் பிறந்த பிராமணரிற் சிலர் திரவிட மொழியியல் ஆய்வுப் போர்வையைத் தம்மீது போர்த்திக் கொண்டு வாய்ப்பு நேராத விடங்களிலெல்லாங்கூட வாய்ப்பை வலிந்து வலித்துக் கொண்டு நாக்கடிப் பாக வாய்ப்பறை அறைவதும்- தேட் கொட்டுக்கொட்டிக் கடுப்புரை வரைவதும் கடமையாகிக் கிடக்கின்றனர்.

அவர்க்குத் துணைபோகும் மாமன்மார்களாக இத் தமிழகத்திலும் அறிவுத்துறையில் தமிழ ஆள்களிற் சிலர் கிடைப்பதால்- அப் பிராமணர் களுக்கு வாய்ப்புகளும் வசதிகளும் வரிசையில் வருகின்றன!

தமிழின் சிறப்பு உண்மைகளைப் பகுத்தாய்ந்து வெளிப்படுத்தும் தன்மானவுணர்வினராக நம்மினத்திற் பிறந்த மொழியியலாளர் முன் வருகையில்தான் முளைப்பும் விளைப்பும் இம் மண்ணில் தோன்றும். இம் மண்டிலத்தில் இது பற்றிய உண்மையும் ஊன்றும்!

விழிப்பின்மையாலும், வீறின்மையாலும், உணர்வின்மையாலும், உறப்பின்மையாலும், துணிவின்மையாலும், துப்பின்மையாலும் திரவிட மொழிகளின் தாயாக நிற்பது தமிழ்மொழியேதான் என்னும் தெளிவான உண்மையை- அறியாமையரும் புரியாமையரும் பொதுளிக் கிடக்கும் இத் தமிழக மண்ணிற் பிறந்த தமிழறிஞர்கள் உலகின் முன் வைத்து முறைப் பட முழங்காது வாளாவிருந்தமையால்- களவாளியரும் கரவாளியருமான சிலர்- வேண்டுமென்றே- இத் தமிழுள்ளிட்ட அனைத்துத் திரவிட மொழி களுக்கும் தாயான பொதுமொழி ஒன்று இருந்து மறைந்து போயிற்று என்றவாறு கரப்புப் போக்குத் (கரப்போக்கு) தன்மாக முடிவு கட்டி அல்லது தமிழர்களும் நம்பத் தகுந்த அளவில் கதைத்துப் போட்டு- அம் மறைந்து போயுள்ளதாக்க் கற்பித்துக் காட்டிய புதுக் கற்பனைமொழிக்கு "முந்து திரவிடம்" என்னும் பொருட்பாடுடைய Proto- Dravidian என்னும் ஆங்கிலச் சொல்லையும் மொழியியற் கலைச் சொல்லாக்கத்துள் ஒன்றாக்கி நிறுத்தியுள்ளனர்!

திரவிட மொழிகள் என்னும் சொற்கூட்டு, தமிழுக்கு இனமாக் வுள்ள- இன்னும் தெளிவாகச் சொன்னால் தமிழ் மொழியினின்று பிரிந்து பெயர்ந்த அனைத்துக் கிளை மொழிகளையும் ஒரு சேரக் குறித்து நிற்ப தாகும்.

தமிழ்— தாய்! தமிழிய மொழிகளான திராவிட மொழிகளோ- அத் தமிழ்த்தாயின் பிள்ளைகளும் குஞ்சு குளுவான்களும் நஞ்சான் பிஞ்சான்களுமான பிறப்புகள் ஆவன!

திரவிட மொழிகள் ஒவ்வொன்றும் ஒரு முளரிச் ( Rose ) செடியினின்று பிரித்து எடுக்கப் பெற்ற பல்வேறு பதியக் கன்றுகள் ! தனித்தனிச் சாடியில் உள்ள மண்ணிற் பதிக்கப் பெற்றுப் பிரிவெய்தித் தனித் தனி ஆயின அவை! ஆங்காங்குள்ள மண்சாறத்தின் அதாவது சூழலின் இயல்புச் சாறத்தின்- அவ்வப் பகுதி மாந்தரின் மனவளர்ச்சிச் சாறத்தின் ஊட்டப் பாங்குகளினால் உயர்ந்தும் உலர்ந்தும் வழங்கி வருபவை அவை!

தமிழ் முளரிச் செடியினின்று தப்பாமற் பிறந்த பிறங்கடைப் பதியக் கன்றுகள்தாம் அவை என்னும் உண்மையை- அவ்வக் கன்றுகளினின்று தோன்றியுள்ள பூக்களும் மொட்டுகளும் முள்களும் இலைகளும் துலங்க ஒளிர்ந்து காட்டுகின்றன ! ஒலிப்பில் ( தழைப்பில்- ) ஒருமை தெரிவிக்கின்றன ! பூக்கள் யாவும் மணத்தில் ஒருமித்த நறுமையையே பரப்புவிக்கின்றன!

அடிப்படையை ஒப்புமைப்படுத்திப் பார்க்கையில் திரவிட மொழிகள் யாவும் ஒன்றிலிருந்தே உருவாகி நின்றுள்ள உண்மையை ஐயமற அறியலாம்! ஆனால்- அவ்வொன்று இன்று இன்று என்று கூறும் கூற்றில் உண்மை இன்று என்பதைத் தமிழ் மொழியை ஆழ்ந்து நோக்கின் தெளிவாகத் தெரியும்!

" முந்து திரவிடம் " என்னும் பொருள்படும் Proto- Dravidian என்ற சொல்லைத் தமிழை நோக்கிச் சுட்டும் மொழியியற் கலைச் சொல்லாகக் கொள்ளுகை- ஒரு வகையில் உண்மையும் பொருத்தமும் ஆகி நிற்கும்! திரவிட மொழிகளுக்கான தாயான தமிழ்- என்றவாறு பொருள்படும் நிலையில் பயன்படுத்துதலை மொழியியலார் இனி மேற்கொள்ளுவராயின் அச்சொல் பிழைபாடு அற்றதாகி விடும்!

திரவிடக் குடும்பம் என்னப்பெறும் தமிழியக் குடும்ப மொழிகளுக்குத் தாயாகமட்டுமல்லாமல்- உலக மக்கள் தொகையில் ஏறத்தாழ

சரிபாதியரான 200 கோடி மக்களால் பேசப்பெறும் இந்தைரோப்பிய மொழிக் குடும்ப மொழிகளின் பெருக்கத்துக்கான மூலக் கருநிலைகளை அளித்துதவிய மூல மொழியாகவும் இத் தமிழ் இலங்குகின்றது!

வட கொரியாவிலும்- தென் கொரியாவிலும் உள்ள ஐந்து கோடிக் கொரியன் மொழியராலும்- சப்பானில் உள்ள பத்துக் கோடிச் சப்பானியராலும் பேசப் பெறும் மொழிகள் திரவிடச் சார்புடையனவாக ஆங்குள்ள மொழியறிஞர்கள் சிலரால் ஆய்வு மேற்கொள்ளப் பெற்று வருகின்றது.

ஆத்திரேலியப் பழங்குடி மொழிகளும்- இசுப்பெயின் நாட்டின் வடகிழக்கிலும் பிரஞ்சு நாட்டின் தென் மேற்கிலும் வழங்கும் 'பாசுக்கு' மொழியும் திரவிட மொழிச் சார்பினவென்று மொழியறிஞர்கள் அறியத் தொடங்கியுள்ளனர்.

இவை தவிர - உலக மொழிக் குடும்பங்கள் பலவற்றிற்கும் தமிழ் மொழி அளித்துள்ள கொடை மிக மிகப் பெரியது என்னும் உண்மை முகில் மூட்டத்தின் அப்பால் தோன்றும் கதிரவ ஒளி போல் காட்சியளிக்கின்றது! இவ் வகையில் முறையுற்ற முயற்சி இவ்வுண்மையொளியை உலகத்திற்குப் பரப்பிப் பயன் நல்கும்!

[ உலக மொழிக் குடும்பங்கள் பலவற்றிலும் பெற்றோரும் ஈன்றோரும் ஆகிய அம்மையையும் அப்பனையும் குறித்த சொற்களின் கிடக்கையை ஆய்தலில்- இத் தொன்மைத் தமிழ்,- உலகுக்கு அளித்த மொழிக் கொடையை ஒரு சோற்றுப் பதமாக உன்னிப் பார்க்கலாம் என்பதால்- ''பெற்றோரைப் பற்றி'' என்னும் தலைப்படியின் கீழ் இச் சிறிய கட்டுரைநூலானது தொடக்கமுறுகின்றது! ]

குரங்கு !........... கைகளை ஊன்றி நடக்கும் நிலையினின்று வளர்ச்சியடைந்து இரு கால்களைக் கொண்டு மட்டுமே நிற்கவும் நடக்கவும் தொடங்கியது, குரங்கு..... மாந்தன் ஆகியது !

இயற்கையான உணர்ச்சியொலிகளை வெளிப்படுத்தத் தொடங்கி, விளியொலியிட்டு அழைக்கக் கற்றுக், கைச் சைகையால் (செய்கையால்)

கருத்தைத் தெரிவிக்கத் தொடங்கியவாறு வளர்ந்து கொண்டே மாந்தனாகிப் போனான் ! குரங்கினத்திலிருந்து தன்னைத் தனிப்படுத்திக் கொண்டான்.

ஆ — ஈ — ஊ - என்னும் நெட்டுயிர்ப்பு ஒலிகளே முதற்கண் உணர்ச்சியொலிகள் ! அவற்றில் ஆ — ஈ என்பவற்றைத் தொடர்ந் தொலித்து ஆஈ > ஆயி > ஆய் > அய் > ஐ என்றவாறு குறுக்கி யொலிக்கப் பயின்று அதனை வியப்புக்கான ஒலியீடாகப் பயன்டடுத்தத் தொடங்கினான். ( இந் நிலையுண்மையின் பதிவுச் சாறம் தொல்காப்பிய எழுத்ததிகாரத்தின் மொழி மரபுப் பகுதியில் உள்ள " அகர இகரம் ஐகாரம் ஆகும் " என்னும் 21- ஆம் நூற்பாவில் உட்பொதிந்து தொக்கி நிற்பதை நுண்ணிதின் நோக்கின் தெளியவுணரலாம் !... )

" ஊ " என்னுமாறு ஒலியிட்டு வந்தவன்- அதனை " ஓ " என்றவாறு திசைவித்து எளிமைப் படுத்திக் கொண்டான் !

ஆ — ஈ — ஊ — ஓ — ( அய் > ) ஐ என்றவற்றான உணர்ச்சி யொலிகளைப் பயன்படுத்தித்- தன்னின் இன்பவுணர்ச்சிகளை அல்லது துன்பவுணர்ச்சிகளை வெளிப்படுத்துவதற்கு அவற்றின் வழிப் பழக்க மாக்கிக் கொண்டே மொழியைத் தொடங்கினான்.

" ஈ " என்னும் ஒலியிட்டு " ஏ " என்றவாறு அதனைத் திசை வித்து எளிமையாக்கிக் கொண்டான்! " ஏ " என்பதனை ஏ+ஈ > ஏயி > ஏய் என்றவாறு நீட்டியொலித்தமையில் சேய்மையிலிருந்த தன் தொடர்புடையாளனை அல்லது தொடர்புடையாளை எளிதாகவும் அதே நேரத்தில் வலிதாகவும் விளித்து அழைக்கத் தொடங்கினான்.

" ஓ " என்றொலித்து விளிக்கத் தொடங்கியவன் பின்னர் ஓ + ஈ > ஓயி > ஓய் என்றவாறு நீட்டியொலிக்கப் பயின்றான் ! அதனால் எளிதே விளிக்கத் தெரிந்தான் !

உணர்ச்சியொலிகளையும்-விளியொலிகளையும் பயன்படுத்தி வருகையின் வளர்ச்சி வழியில்- பிற உயிரிகளிட்ட ஒலியீடுகளைப் போலவே தானும் ஒலித்துப் பார்த்துப் பயின்று- அதனடிப்படையிலான பெயர்களால் அவற்றைச் சுட்டவும் படிப்படியே தேர்ந்தான் !

( ஒ. நோ : கா கா > காக்கா > காக்கை.
மா > மா + டு > மாடு.
குர் > குர் + அங்கு > குரங்கு )

ஆ, ஈ, ஊ என்னும் இயற்கையாக இயன்ற இந்- நெட்டுயிர்ப் பொலிகளைக் கொண்டே உணர்ச்சிகளை வெளிப்படுத்தத் தொடங்கி- இவ்வுணர்ச்சி வெளிப்பாட்டுக்குப் பயன்பெற்ற ஒலிகளையே சுட்டு வதற்குமுரிய ஒலிகளாக மாந்தன் பயன்படுத்தத் தொடங்கினான்.

" ஆ " - என்னும் ஒலியைச் சேய்மையைச் சுட்டுவதற்கென்று பயன்படுத்தினான். வாயை அகலித்து விரித்துத் திறந்து வெளிப் படுத்தியதால் உண்டாகிய ஆகார ஒலியைச் சேய்மைக்கும்- வாயைப் பக்கவாட்டுகளில் இழுத்தாற்போலும் இடவலப்பக்கத்திற்குச் சரிசமனாக வலித்து நின்று ஒலித்த ஈகார ஒலியைத் தனக்கு மிக அண்மைக்கும், வாயிதழ்களை முன்னுக்குக் கூட்டிக் குவித்து முயற்சியோடு ஒலித்த ஊகார ஒலியைத் தனக்கு முன்மைக்கும் ஆகப் பயன்படுத்திச் சுட்டத் தொடங்கினான்.

ஆ, ஈ, ஊ என்னும் நெட்டொலிகளான முந்நிலைச் சுட்டு களே- முதற்கண் இம் மொழியில் சுட்டொலிகள். இவற்றின் பதன்பட்ட குறுக்கமே அ, இ, உ என்பன. இவ்வுண்மையை "அ இ உ-அம் மூன்றும் சுட்டு " என்றவாறு தொல்காப்பியத்தின் எழுத்ததிகாரத்தில் நூல் மரபுப் பகுதியிலுள்ள 31- ஆம் நூற்பா சுட்டுகையில்-பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளின் மொழியியல் தொடர்ச்சிப்பாடு கலங்கல் இல்லாமல் துலங்கி நிற்பது வியப்பானதாகும்.

இச் சுட்டொலிகளின் தோற்றமே- "தமிழ்" என்றும் மொழியைக் கருப்பெற வைத்தது! பிறகுதான் செயற்கை மொழியாக ( Artificial language ) வளங் கொழிக்கத் தொடங்கியது.

கருத்துப் பெருக்கமானது- ஒன்றையொன்று பற்றிப் படிப்படி யாகவே நிகழும் தன்மைப் போக்கு உடையதாகும்.

தன்னை ஈன்ற உயிரியைப் பிறந்த உயிரியானது தான் வளர-வளர அடையாளங் கண்டு கொள்ளும்நிலை உறவு பற்றிய செய்தியில் முதல் நிலை உடையதாகும்!

தாயாகிய அவ்வுயிரியைக் குறித்தற்கான குறியிட்டுச் சொல்லை "ம்மா!..." என்ற ஒலிப்பமைப்பில்- ஆவும் கன்றும் ஒன்றையொன்று விளித்துக் கொள்ளும் காட்சியினின்று மாந்தன் பெற்றுள்ளான்! உணர்ச்சியொலிகளில் தலையாயதான அங்காப்பு ஒலிகளைப் பயன் படுத்தி ஆ + ம்மா > ஆம்மா > அம்மா என்றவாறு சுட்டித் தன் தாயை விளிக்கத் தொடங்கினான். "ஆம்மா"- என்பதை நெடுமுதல் குறுக்கி "அம்மா" என்று ஒலித்தமை- ஒலிப்பு வசதிக்குரிய தன்மையை அது பெற்றிருத்தலான் ஆகும் என உணர்தல் வேண்டும்.

[ "ம்மா"- என்றவாறு ஆவும் எருதும் எருமையும் ஒலித்த ஒலியைக் கொண்டே- "மா" எனும் ஒப்பொலியிட்டு (Imitative sound.) அவற்றைச் சுட்டத் தொடங்கினான்.

ஆனினத்தின் (பசு இனத்தின்-) ஒலியீட்டினின்றே ஒப்பொலி யடிப்படையில் உருவாக்கிக்கொண்ட "மா" என்னும் சொல்லைப்- பொதுவான அனைத்து விலங்குகட்குமுரிய சிறப்புப் பொதுச் சொல் லாகவே பின்னர்ப் பயிலத் தொடங்கினான்.

மா = விலங்கு. (எ-டு) "மாவும் மாக்களும் ஐயறி வினவே" (தொல். பொரு: 587)

குதிரையைக் குறித்தும்- யானையைக் குறித்தும் இம் "மா" என்னும் சொல்லைப் பயன்படுத்தினான், பன்றியையும் இச் சொல்லால் குறித்தான் (காண்க: சூடா. நி.) கீழ்க்குறித்துள்ள சில கூட்டுச்சொற்களை நோக்கின் இச் சொல்லின் பொதுப் பயன்பாட்டு மரபை உணரலாகும் (காண்க: பரிமா, நரிமா, வரிமா, அரிமா, கரிமா)

முந்துநிலையையுடைய ஆனினத்தைப் பொதுப்படச் சுட்டும் சொல் தேவைப்படவே- "மா" என்னும் அத் தொடக்க ஒப்பொலிச்சொல்லொடு

ஈறிணைத்து விரிவாக்கி மா + டு > மாடு என்றவாறு சிறக்கத் தனிப் படுத்தி பயன்படுத்தினான். (ஒ. நோ: ''பகட்டின மாடுகள்'' (கம்பரா. பள்ளி : 14)

''மா'' - என்ற சொல் கொண்டு மா + அன் > மான் என்றவாறு அதனை ஆக்கப்படுத்திக் கொண்டு- அச்சொல்லைப் பொதுப்பட விலங்கிற் கும்- சிறப்புப்பட மான் இனத்திற்குமாகக் குறித்தற்குப் பயன்படுத்தலா னான்.

விலங்கின் பொதுப்பெயராக ''மான்'' என்னும் சொல்லைப் பயன்படுத்திவந்த மரபைப் பிங்கலம் தெளிய நிலைநிறுத்திக்காட்டும். ''தெம்முனையுண் மானொடு தோன்றி'' (பு.வெ.10 : பொது :5). என்னும் புறப்பொருள் வெண்பாமாலை வரியில் குதிரை- ''மான்'' என்னப்பெற்றமையையும்- ''விலங்கு மான்குரல் கேட்பின் வெருவுவை'' (கலித் : 13) என்றவாறுவரும் கலித்தொகை வரியுள் அரிமா- ''மான்'' என்னப்பெற்றமையையுங் காணலாம்.

ஒப்பொலி அடிப்படையில் கருத்து விளர்ந்தும் விரிந்தும் சென்ற மைக்கு இதனை ஓர் எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம் !......]

**அம்மா!...**

அம்மா என்பது விளிப்பெயராயினும்-அதுவே முதற்படியிலமைந்த முறைப்பெயருமாகும். அம்மா என்பதை ''அம்மை'' என்றவாறு செப்பவடிவப் படுத்தினமை மொழி மீப்பதப்பாடு எய்திய வளர்ச்சி நிலையினதாகும்! ''அத்தனோடு அம்மையென'' (தேவா : 598 : 9)

''அம்மா'' என்றவாறு தாயை நோக்கி விளித்த விளி- மிகப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரேயே தமிழகத்தில் தமிழரால் ஒலிப்பு உற்றதாகும் என்னும் உண்மையை- இன்றைக்கு இருபந்தைந்து நூற் றாண்டுகளுக்கும் முன்னரேயே- அஃதாவது கி.மு. 500- ஆம் ஆண்டுக்கும் முற்பாடேயே அவ் விளிச் சொல்லின் பிந்தைய குறுக்கமான ''அம்ம''

என்னும் சொல்லானது (ஒருவரை எதிர்முகமாக்கி நிறுத்திக்-) கேட்க வைத்தற்கு என்று ஒலிக்கும் பொருட்சொல் ஆகும் எனத் தொல்காப்பியத்துள் அழுத்தந்திருத்தமாகக் குறிக்கப்பெற்றுள்ள பதிவுகளினின்று தெளிவாக உணர முடிகின்றது.

தொல்காப்பிய நூலின் இடையியலில் உள்ள 28- ஆம் நூற்பாவாக உள்ள "அம்ம கேட்பிக்கும்" என்னும் பதிவு- மிக மிகத் தெளிவு வாய்ந்த முற்குறிப்பாகும்.

"கேள்" என்னும் தன்வினைச் சொல்லுக்குரிய பிறவினை வடிவம் (Causal or Causative verb) "கேட்பி" -என்பதாகும். "கேட்க வை" என்பது இதன் பொருளாகும்.

தாயைக் குறித்து "அம்மா" என்று அழைத்த விளிவடிவம்- காலப்போக்கில் "இதனைக் கேள் !" (-நான் கூறுவதனைக் கேள் !) என்னும் பொருளுக்குமாகி வளர்ச்சியடைந்தது. "அம்மா" என்னும் விளிவடிவத்தில் உள்ள ஆகார இறுதியொலி- அகர இறுதியொலியாகிக் குறுகுகையில்- சேய்மைக்குரிய தன்மைப்பாடு குறைவுற்று அண்மைக்குரிய தன்மைப்பேறடைந்து நிறைவுற்று நிற்றலை நுண்ணிதின் நோக்கின் தெளியக் காணலாம்.

"அம்மா" என்பதனினும்- "அம்ம" என்பதுவே மிக அண்மையிலுள்ள தாயை விளிப்பதற்குரிய இயற்கையமைப்பை ஏற்றுப் பொருந்தி நிற்கின்றது. இது, விளித்தலின் இடையிலமைந்த இடத்தொலைவானது மிகக் குறுகி அண்மைப்பட்ட நிலைநோக்கிக் குறுக்கமடைந்துள்ள இயல்புக் குறுக்கமாகும். "அம்ம" என்பது "அம்மா" என்பதினின்று குற்றுருப் பெற்றமைந்த அண்மை விளியாகும்.

"அம்ம" எனத் தாயை நோக்கிக் கூறிய அண்மை விளிப் பெயரின் பல்லாயிரமாண்டுத் தொடர்பயில்வானது- தொல்காப்பியர் காலத்திலும்- அவர் காலத்துக்கு முந்திய காலத்திலும் உரைப் பொருட் கிளவியாகச் சுட்டப் பெற்றுள்ளமையில்- "அம்மா" என்னும் சொல்லின் தொன்முது பழைமையாட்சியுண்மையை நுண்ணிதின் விளங்கிக் கொள்ளலாம்.

அம்ம = ஓர் உரைப் பொருட் கிளவி.

சான்றுகள் : (1 - 1) ‘‘ அம்ம என்னும் உரைப்பொருட்கிளவியும் ’’
(தொல். எழுத். உயிர்ம : 8 : 7)
(1 - 2) ‘‘ உரைப் பொருட்கிளவி நீட்டமும் வரையார் ’’
(தொல். எழுத். உயிர்ம: 10)

[ தந்தையைக் குறித்துத் தோன்றிய ‘‘ ஐயன் ’’ என்னும் சொல்லின் விளிவடிவமான ‘‘ ஐய ’’ என்பது, ‘‘ இதனைக் கேள் ! ’’ என்னும் பொருளில் இனறும் நம்மிடையே மிகப் பரவலாக வழங்கி வருதல் இதனொடு ஒப்பிட்டுக் காண வேண்டிய உண்மைகளுள் ஒனறு.

எ-டு. : (1) ஐய, இதைப் பார் !
(2) ஐய, அதை எனக்குக் கொடு ! ]

‘‘ அம்மா ’’- என்பதன் அண்மை விளியான ‘‘ அம்ம ’’ என்னும் சொல்லானது ‘‘ கூறுவதைக் கேள் ! ’’ என்றாற்போன்ற பொருட்பாடு நிரம்பி- உரைப் பொருட் கிளவியாகவே அதனைக் குறிக்குமளவிற்கு- 2500 ஆண்டுகளுக்கு முந்தியே இத் தமிழக மண்ணில் பரந்த பயில்வாட்சியைச் செலுத்தியுள்ளமையைக் கழக இலக்கியப் பரப்பின் நெடுகலுங் காணவியல்கின்றது.

‘‘ அம்ம ’’ என்ற தாயைக் குறித்து எழுந்த அண்மை விளிச்சொல்- தன் நிலையினின்று பொருள் பெயர்நது வளர்ந்து உரைப்பொருட் கிளவியாகவே பரக்கப் பயில்வுடையதாகி ஒரு மரபுநிலையையே படைத்துவிட்ட பாங்குகளை- ஐங்குறு நூற்றின் 31- ஆம் பாடலினின்று 40- ஆம் பாடல் வரையிலும், 111- ஆம் பாடலினின்று 120- ஆம் பாடல் வரையிலும், 221- ஆம் பாடலினின்று 230- ஆம் பாடல் வரையிலும், 331-ஆம் பாடலினின்று 340- ஆம் பாடல் வரையிலும் ஆகவுள்ள 40 பாடல்களின் தொடக்க வரிகளும் ‘‘ அம்ம வாழி தோழி ! ’’ எனத் தொடக்க விளிப்புமரபுப் பயில்வுகள் கொண்டுள்ளமையில் தெள்ளிதின் உணரலாம்!

[ இவ் வகைத் தொடக்க விளிப்பு மரபுப் பயில்வுகளைக் குறுந்தொகையினுள்ளும் பரக்கக் காணலாம்.

காண்க : குறுந் : 77 :1 ; 104 : 1 ; 134 :1 ; 146 : 1 ; 230 : 1 ; 350 : 1 ; 375 : 1 ]

[ " அம்ம வாழி தோழி " ( நற் : 79 : 9 ) உரை : தோழி வாழி அம்ம = தோழீ- வாழி ! இதனைக் கேட்பாயாக !

வாழி : " செய்க " என்னும் வாய்பாட்டு வியங்கோள் கிளவி யாகிய வாழிய என்பதன் இறுதியாக நிற்கும் யகர உயிர்மெய் கெட்டு " வாழி " என மட்டும் நின்றது. வாழிய என்பது வாழ்க என்னும் பொருள்படுவதாகிய வியங்கோள் கிளவி. வாழ்க என்பதன் ஈற்றுத் திரி பெய்திய வடிவமே வாழிய என்பதாகும். " வாழிய " என்னும் சொல் வாழி என நிற்றற்கான இலக்கண அமைதியைத் தொல்காப்பியம் " வாழிய என்னும் செய்கென் கிளவி இறுதி யகரம் கெடுதலும் உரித்தே" ( தொல். எழுத். உயிர்ம : 9 ) என்னும் நூற்பா வழியாகத் தெளிவுறுத்தும்.

செய்கென் கிளவி : குறிப்புரை : இம் மேற்கண்ட நூற்பாவில் பயில்வுறும் " செய்கென் கிளவி " ( செய்க என் கிளவி ) என்னும் மூலவுண்மைக்கான திருத்தம் தஞ்சாவூர்- உரைப் பேராசிரியர் பெரும் புலவர்- பாலசுந்தரனாரால் மேற்கொள்ளப்பெற்றதாகும். இளம்பூரணர் கொண்ட " சேயவென் கிளவி " என்னும் பாடத்தினும்- நச்சினார்க் கினிய கொண்ட " செயவென்கிளவி ", என்னும் பாடத்தினும்- தெய்வச் சிலையார் கொண்ட " செய்யென் கிளவி "என்னும் பாடத்தினும்- இப் பெரும் புலவரால் மேற் கொள்ளப் பெற்ற பாடத் திருத்தம்- ஆன்றறிந் துணர்ந்து செய்த அருந்திருத்தமாகும். ]

ஒருவரை எதிர்முகமாக்கி விளிக்கும் பொழுது " வாழிய ! " என்றும் " வாழி " என்றும் முற்பட வாழ்த்துக் கூறித் தொடங்கும் தமிழக மண்ணின் மரபு- கழக இலக்கியங்களில் நன்கு பதிவெய்தி நிற்பதைப் பரக்கக் காணலாம்.

" அம்மா " என்பதன் அண்மை விளியாகிய " அம்ம " என்பது பெண்ணை நோக்கி மட்டுமே முதற்கண் விளிக்கப் பெற்று வந்து- காலப் போக்கில் உரைப்பொருட்கிளவியாக வளர்ந்து நின்ற பின்றைய பொழுது களில் ஒரொருகால் மரபுப் பிழையாக ஆண்பாலை நோக்கிக் கூறிய இடங்களிலும் பிறழ்வுறப் பதிந்து வரத் தொடங்கியது.

ஒ. நோ. (1) " அம்ம வாழி பாண " ( ஐங் : 89 : 1; 132 : 1 )
(2) " அம்மா வாழி கொண்க " ( ஐங் : 139 : 1 )

''அம்ம'' என்னும் உரைப்பொருட்கிளவி தொடர்ந்த மரபுப்பயில்வு உடையதாகி- அதற்கேயுறிய பொருட்பாட்டு உள்ளீடே ஒக்க மங்கிப் போய் பொதுப்பட்ட அசைச்சொல்லாகவே கூட அது ஆகி நின்று பயில் வுற்றிருக்கின்ற கழக இலக்கியப் பதிவுகள்- அதனின் முந்தைய பழமைத் தகுதி பற்றிய நம்மின் தெளிந்த உண்மைக் கணிப்பிற்கு வலிமை சேர்க்கும் வகையில்- அதனினும் முந்திய கால நீட்சிப்பயில்வுகளை அது பெற்றிருந் திருக்கின்றமையை நமக்கு மேலும் உணர்த்தி உறுதியுரைத்து நிற் கின்றன !

'' அம்ம ''- என்னும் சொல் தொல்காப்பியர் காலத்திற்கும் முன்னரேயே அசைச் சொல்லாகவும் பயிலப் பெற்றது. '' உண்டால் அம்ம இவ்வுலகம் '' என்வரும் புறநானூற்றின் 182- ஆம் பாடலின் தொடக்க வரியிடையிற் பயின்று வந்துள்ள '' அம்ம '' என்னும் ஆட்சி- அசைநிலையாக வந்துள்ளமை இவ்விடத்தில் கருதிப் பார்க்கத் தக்க தாகும்.

( மே : கா : ) : கல்லாடர் உரை : '' அம்ம '' என்று சொல்லப்படு கின்ற அகரவீற்று அசைச்சொல் ... ( தொல். சொல். விளி : 36. )

'' அம்மா '' என்னும் விளிப்பெயரின் அண்மை விளியாகிய '' அம்ம '' என்னும் சொல் உரைப் பொருட் கிளவியாகவே மாறி வளர்ந்து- அதனினும் பொருட்பாடு மங்கிய அசை நிலையாகப் பொதுப் பட்டு வழங்கி- அதுவே செய்யுளிடத்தும்- உலக வழக்கிடத்தும் மீளவும் '' அம்மா '' என்றவாறு ஆதலும் உண்டு. இந்த '' அம்மா '' என்னும் அசைச் சொல் வளர்ச்சி வடிவைத் தொல்காப்பியர் தம் விளிமரபுப் பகுதி யுள்- '' அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம் '' என்ற வரித் தொடரால் குறித்துக் காட்டியுள்ளார்.

( காண்க : தொல். சொல். விளி. 36 : 1 )

( ஒ. நோ: '' அம்ம கேட்பிக்கும் '' ( தொல். இடை : 272) எனவரும் நூற்பாவுக்கு உரைதரவந்த தெய்வச் சிலையார் அவ்விடத் தின்கண்- ( '' அம்ம ''- என்னுஞ் சொல்- ) அசை நிலை என்பது எற்றாற் பெறுதுமெனின்- '' அம்ம '' என்னும் அசைச் சொல் நீட்டம் ( விளிமரபு : 35 ) என்பதாற் பெறப்படும் ''- எனக் குறித்துள் ளமை காண்க ! )

" அம்ம " என்னும் உரைப்பொருட் கிளவி- என வரும் தொல்காப்பிய நூற்பா வரித்தொடருக்கு ( தொல். எழுத். உயிர்ம. : 1 : 211 : 7 )- " அம்ம - என்று சொல்லப்படும் எதிர்முகமாக்கிய அகர ஈற்று இடைச்சொல் " என்று நச்சினார்க்கினியரும், " அம்ம "- என்று சொல்லப்படும் உரையசைப் பொருண்மையுடைய இடைச்சொல் என்று இளம்பூரணரும் கூறி- அது இடைச்சொல்லாக வழங்கிவரும் உண்மை யையும் விளக்கி நிறுத்தினர் !

நன்னூல் உரையாசிரியர் ஆறுமுக நாவலர், " அம்ம "- என்பது " உரையசை இடைச்சொல் " எனச் சுருங்கச் சுட்டினார். [ "அம்ம "- என்னும் உரையசை இடைச்சொல்லின்முன்னர் வரும் விளிப்பெயர் இயல்பாகப் புணர்கின்ற உண்மையை " அம்ம முன் இயல்பே " என முடியும் உயிரீற்றுப் புணரியலிலுள்ள நூற்பாவில் (நன். உயிரீற்றுப் : 17) நன்னூலார் குறித்துக் காட்டினார். ( எ- டு : அம்ம + கொற்றா > அம்ம கொற்றா. அம்ம + சாத்தா > அம்ம சாத்தா. ]

" அம்ம " -என்னும் அசைச்சொல்லின் நீட்டமாகிய " அம்மா " என்னும் சொல்- தாய்க்குரிய முறைப்பெயரான " அம்மா " என்பத னொடு பொருந்தாது. ஏனெனில் வேறுவகைப் பொருட்போங்குக்கு மாறித் தனிப்பட்டுப்பிரிந்து வளர்ந்துவிட்ட அசைச்சொல்லின் நீட்டமாக அது இருக்கின்றது. " அம்ம " என்னும் உரையசைப் பொருண்மையுடைய இச் சொல்- "அம்மா" என்று நீண்டது எதிர்முகமாக்கும் சொற்பொருண் மையுடனிருக்கும் அதே பான்மையிலேயே! ஆயினும் எதிர்முகமாக்கி விளித்து நிற்கும் ஆட்பெயரோடு- அதே போன்று எதிர்முகமாக்கி விளித்து நிற்றற்கான மற்றுமொரு விளிப் பொருண்மைச் சொல்லாகவே அறிஞர் தெள்ளிய நிலையிற் கருதி ஏற்று நிற்பர்.

இதனை,

" அம்ம வென்னும் அசைச்சொல் நீட்டம்
அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்
விளியொடு கொள்ப தெளியு மோரே "

எனத் தொல்காப்பியம் சுட்டி நிற்கும். ( தொல். சொல். விளி : 36 )

இந் நூற்பாவுள் " அம்மா " என்றவாறு தாய்க்குரிய முந்தைப் பெயராகிய ஒரு முறைப்பெயர் இருந்தவுண்மை உட்கிடையாகச் சுட்டப் பெறுவது நன்கு கவனிக்கத் தக்கதாகும்.

இந் நூற்பாவுள் பயிலப் பெற்றுள்ள " முறைப் பெயர் " என்னும் சொல்லாட்சியின் உண்மையை உணர்கையில் ஒள்ளிதும் தெள்ளிதுமான துலக்கமொன்று விளக்கமாகும்.

முறை— முறைப் பெயர் என்பவற்றுக்கான விளக்கக் குறிப்பு :

**முறை :** இச் சொல்லுக்குரிய மூலப் பொருள்களில் " உறவு " என்னும் பொருளும் மூலநிலைப் பொருண்மையுடையதாகும். சுழற்சி நிலையில் வரும் தொடர்பு அல்லது சூழ்வு நிலையில் உருவாகும் தொடர்பு- " முறை " என்னும் பெயர் பெறலாகும். ஒருவர்க்கு ஒருவர் கொண்டுள்ள மணநிலை- அரத்தத் தொடர்பு நிலை ஆகியவற்றால் நேர்ந்து நிற்கும் உறவுத் தொடர்பையும் இம் " முறை " என்னுஞ் சொல் குறித்து நிற்கும்.

" முறை யாதியி னிதற்கிதெனல் பொருளே " என்றவாறு முடிந்து நிற்கும்- நான்காம் வேற்றுமையாகிய குவ்வுருபுக்கென வரையறைப்படுத்தி வார்த்துள்ள நன்னூல் நூற்பாவுள்- " முறை " என்பது முறைக்கியை பொருளாக வந்து நிற்கை நன்கு கவனிக்கத்தக்கதாகும்.

[ எ-டு : " சாத்தனுக்கு மகன் கொற்றன் " என்பது முறைக்கியை பொருள். முறைக்கியை பொருளாவது, பிறப்பினால் ஒரு பொருளின் முறைக்குத் தான் இயைந்து நிற்கும் பொருளாம். ( விளக்கம் : " சாத்தனுக்கு மகன் கொற்றன் "- என்புழிக் கொற்றனிடத்துள்ள மகன் என்னும் முறைக்குத் தானியைந்து நிற்கும் பொருள் சாத்தனாதலாற் சாத்தன் முறைக்கியை பொருள். ]

முறை என்னுஞ் சொல்- உறவு முறைப் பெயரைச் சுட்டும் பொருண்மையுடையது என்பது, " பெரியாரை என்றும் முறை கொண்டு கூறார்; புலையரையும் நன்கு அறிவார் கூறார், முறை" என வரும் ஆசாரக் கோவை வரிகளில் ( பா : 80 : 2-4 ) விளங்கி நிற்பதைக் காணலாம்.

சாதி வழக்கத்திலுள்ள உறவு முறைப்படி புரிந்து கொள்ளும் திருமணக் கட்டானது- " முறைக்கட்டு " என்ற சொல்வழி யாழ்ப்பாணத்தில் பயிலப் பெறுவதும், அத்தை அல்லது அம்மான் மகள்போல

ஒருவனை மணம் புரியும் உறவு முறையுள்ள பெண்ணை " முறைப் பெண் " எனவும்- அத்தை அல்லது அம்மான் மகன் போல ஒருத்தியை மணம் புரியும் உறவு முறையுள்ள ஆடவன் ஒருவனை முறைமாப்பிள்ளை என்றவாறும் அல்லது முறைகாரன் என்றவாறும் தமிழகத்தில் பயிலப் பெறும் ஆட்சிகளும் அற்றைக் காலத் தொடர்ச்சிப்பாடுகளாகவிருக்கும் இற்றைக் காலச் சான்றுகளிற் சில.

இற்றைக்கால முறையற்ற சாதிவெறியில் ஊறிக்கிடக்கும் தமிழகத்தில்- சாதி வழக்கத்திற்கு மாறாக மணம் புரியுஞ் செயலை " முறை மாறுதல்" என்ற சொல்லால் சில்விடங்களில் குறிக்கும் வழக்கும்- இங்குக் கணக்கில் எடுத்துக் கொள்ளவேண்டிய தொடர்புச் செய்தியே !

முறைப்பெயர் என்பது உறவு முறைப் பெயரையே பண்டையிற் சிறக்கச் சுட்டிநிற்கும் மரபு பெற்றிருந்தமையைக் கீழ்க் குறித்துக் காட்டப்பட்டுள்ள தொல்காப்பிய நூற்பாக்களால் தெளியவுணரலாம்.

(1) " முறைப்பெயர் மருங்கின் ஐயென் இறுதி
ஆவொடு வருதற்கு உரிமையும் உளவே "

(தொல். சொல். விளி : 127)

(2) " முறைப்பெயர்க் கிளவி ஏயொடு வருமே "

(தொல். சொல். விளி : 137)

(3) " முறைப் பெயர்க் கிளவி முறைப் பெய ரியல "

(தொல். சொல். விளி : 148)

முறைப் பெயரானது- " முறைநிலைப் பெயர் " என்றவாறும் விளக்கவடிவில் பண்டையில் சுட்டப்பெற்றது.

காண்க : " பல்லோர் குறித்த முறைநிலைப் பெயரே "

(தொல். சொல். பெயரி. 166 : 3)

ஆக, முறைப் பெயர் என்பது உறவு முறையாகிய பெயரே என்பது தெரிதரு தேற்றமாகும்.

" அம்ம " என்பதன் அசைச்சொல் நீட்டமாகிய " அம்மா " என்னும் வடிவம்-உண்மையிலேயே வேறுசொல்லாக நின்று முறைப்பெயர்

குறித்து வழங்கி வருகின்ற " அம்மா " என்னும் விளிப்பெயராகிய தாயைக்குறித்த சொல்லின் பொருட் பொருத்தத்தோடு இவ்விடத்தில் பயிலப் பெறவில்லை ; " அதுவேறு ! - இதுவேறு ! " - என்றவாறு தெளிவிப்பதற்காகவே- " அம்ம " என்னும் அசைச்சொல் நீட்டம் அம் **முறைப் பெயரொடு** சிவணாது " (தொல். சொல். விளி : 154 : 1-2 ) எனச் சொல்லதிகார விளிமரபில் நூற்பா ஒன்று கொண்டு தொல்காப்பியர் மயக்கற நிறுத்தினார்.

அம்மா என நீட்டம் பெறுகையில்- இவ்விடத்தில் பெயர்ப் பண்புடைய சொல்லாக அதனை மயங்கக் கூடாது என்பதற்காகவும்- அதனை வினைப் பண்புடையதாகிய கேட்பித்தற்கென வந்த விளிவடிவமாகவே கொள்ளல் வேண்டும் என்னும் உண்மையைத் தெளிவித்தற்காகவுமே- இந் நூற்பாவைத் தொல்காப்பியர் ஆக்கி நிறுத்தியுள்ளார்.

இந்நூற்பாவில் உள்ள " முறைப்பெயர் " என்னும் சொல்லாட்சியால்- " அம்மா " என்னும் உறவுமுறைப் பெயரொன்று நீண்ட நெடுங்காலமாகப் பயின்று வந்துள்ள தெளிந்தவுண்மையானது- உள்ளொளி புறம் வரும் சல்லடைத் திரைக்குள் முற்றவுந் தெரியுமாறு புலங்காட்டப் பெறுகின்றோம்!

**அம்மா, அம்மை, அம்ம**

**அம்மா :** தாயைக் குறித்தெழுந்த இப் பண்டைப் பழந்தமிழ்ச் சொல் விளிப்பெயராகத் தோன்றி முறைப்பெயராக நின்றது.

இச் சொல்லாட்சி பதிவெய்தியுள்ள சில மொழிகளை ஈண்டுக் காண்போம் :

**தமிழிய மொழிகளான திரவிட மொழிகளில் :**

( Dravidian Languages )

Malayalam : amma = mother
Kannada : amma, ama = mother, respectable woman.
amba, ambe = mother.

Kodagu : amme
Tulu : amma = mother; lady
Telugu : amma, ama = mother
honorific title of woman
Kolami : amma = mother
Naiki : amma = mother
Brahui : ammā = mother

அல்லிந்திய ஒட்டுநிலை மொழிகள் :
( Agglutinative non- Indian Languages )

Korean : emi
Manchu : eme
Basque : ama

வகுப்புறாத மொழி
( Unclassed Language )

Burusaski : īmī

ஆத்திரோ- நேசியன் மொழி
( Austro- Nesian Language )

Malay : amà (k)

ஆத்திரோ- ஆசிய மொழிகள்
( Austro- Asiatic Languages )
( Mon- kmēr )
Talaing, ( written ) : mi
( spoken ) : mei
( Sakai- Semāng )

Sakai : ameh

( Palaung-wa )

Palaung : mà
Darāng : mà

| | | |
|---|---|---|
| Wa | : | moà |
| Son | : | mwe |
| En | : | mà |
| Tai- loi | : | mye-u |
| Dana | : | mà- e |
| Yin(or)Riang | : | mà |
| Ka Muk | : | mà |
| | | ( Kāsī Group ) |
| Wār | : | māi |
| | | ( Mundā Group ) |
| Mundāri | : | umā |
| Kūrkū | : | māy |
| Kaṛiā | : | ma- in |

### சீனத்திய மொழிகள்
### ( Sinitic Languages )
### (Tai-chinese Group)

| | | |
|---|---|---|
| Chinese, Southern | | |
| Mandarin | : | mu |
| Cantonese | : | mō |
| Gyāmi | : | mà |
| Siamese ( written ) | : | ma |
| ( Spoken ) | : | ma |
| Lu | : | me |
| Kun | : | me |
| San | : | ma |
| Āhom | : | me |
| Kamtī | : | me |
| Annamese | : | me |

### கரென் மொழிகள்
### (Karen Languages)

Pwo (literary) : mō

| | | |
|---|---|---|
| Pwo Bassein | : | mu |
| Pwo Maulmein | : | mu |
| Taungou | : | mu |
| Sga, (literary) | : | mō |
| (Spoken) | : | mo |
| Bwè | : | mü |
| Wewaw | : | ama |
| Karenbyu | : | mo |
| Karenni | : | mö |
| Yintalä | : | mün |
| Sin- hma | | |
| Mäpauk | : | mȧä |
| Gheko | : | mö |
| Padaung | : | mäö |
| Yeinba | : | mö- (g) |
| Manö | : | mö |
| Zayein | : | ȧmu |
| Mopwa, Bilichi | : | mȧ |
| Mopwa, Dermuha | : | ȧmu |

மன் மொழிகள்
( Man Languages )

| | | |
|---|---|---|
| Man | : | mā |
| Man-ta-pan | : | ma |

திபெத்திய- பர்மிய மொழிகள்
( Tibeto- Burman Languages )

இமையஞ்சார் மொழிகள்
( Himalayan Languages )

| | | |
|---|---|---|
| Kanauri | : | āmā |
| Dimāl | : | āma |
| Tāmi | : | ā-mā |
| Limbū | : | mā, mā-mā |
| yākā | : | mā |
| Kambū | : | māā, mā |

| | | |
|---|---|---|
| Bāhing | : | ā-mo |
| Bālali | : | u-ma |
| Sāngpāng | : | mā, um-ma |
| Lōhōrōng | : | um-ma |
| Lambichōng | : | i-ma |
| Wāling | : | ā-mā |
| Chingtāng | : | ū-ma |
| Rungchenbūng | : | ō-ma, ū-ma, ō-ma |
| Dūngmāli | : | ū-ma, um-ma |
| Rōdōng (or) Chāmling | : | ū-ma, um-ma |
| Nāchereng | : | ūm-ma |
| Kūlung | : | um-mā |
| Tūlung | : | mām, ū-mām |
| Dūmi | : | myam, u- myām |
| Rai (or) Jimdār | : | mu |
| Vāyu (or) Hāyu | : | ū- mū |
| Gurung | : | ā- mā |
| Murmi | : | ā- mā |
| Sunwār | : | ā- mā |
| Magari | : | mai |
| Nēwāri | : | mā- ma |
| Padi, Pahri (or) Pahi | : | mā |
| Rong ( or ) Lepcha | : | ā- mū |
| Dafla | : | ām-mā |

## லோ லோ- மோசோத் தொகுதி
## (Lolo- Moso Group)

| | | |
|---|---|---|
| Si- hia | : | mamo |
| Lolo- Ni | : | a ma |
| Ahi | : | a mo ; i-mo |
| Lo- lo po | : | a- mo |
| A- Ka ( Ka) | : | àmà |
| A- Ko | : | āmà |

| | | |
|---|---|---|
| Lisu | : | à- mà, mà- mà |
| Lisa (or) Yayin | : | àmà |
| Moso | : | amä |
| Nung | : | amē |

### திபெத்தியத் தொகுதி
### ( Tibetan Group )

| | | |
|---|---|---|
| Manyāk | : | à-mà |
| Tàkpà | : | à-mà |
| Haurpà | : | à-mà |
| Bōtiā, Tibetan, | | |
| ( written ) ma | | |
| ( Spoken ) ma | | |
| Balti | : | a-mō |
| of Purik | : | a-mā |
| Ladaki | : | a-ma |
| of Spiti | : | a-ma |
| Kāgate | : | a-ma |
| Sarpa | : | a - ma |
| Danjongka | : | a-mȯ |

### பாராத் தொகுதி
### ( Bara Group )

| | | |
|---|---|---|
| Bodo (or) Baṛa | : | mā |
| Lālung | : | mā |
| Kōch | : | mā |
| Tipurā | : | ā-mā |

### குகி-சின் தொகுதி
### ( Kuki-Chin Group )

| | | |
|---|---|---|
| Meitei | : | mā |

லுய் தொகுதி
( Lūi Group )

| | | |
|---|---|---|
| Andro | : | à-mē |
| Kadu | : | a-mä |

பர்மியத் தொகுதி
( Burma Group )

| | | |
|---|---|---|
| Lasi (or) Lechi | : | myi |
| Maru | : | mi |
| Pun, Samong | : | a mi |
| Burmese | | |
| ( written ) | : | amē |
| ( spoken ) | : | a-me |
| Arakanese | : | ami |
| Taungyo | : | amwe |
| Danu | : | ame |
| Tovoyan | : | ami |

செமித்தியக் குடும்பம்
( Semitic family )

| | | |
|---|---|---|
| Arabic | : | umm |

இந்திய- ஐரோப்பியக் குடும்பம், ஆரியத் துணைக் குடும்பம்
( Indo- European family, Aryan sub-family )

ஈரானியக் கிளை

( Eranian Branch )

| | | |
|---|---|---|
| Ormurī | : | māwa |
| Eastern makrānī | : | māo |

## தார்திய அல்லது பைசாசக் கிளைகள்
## ( Dardic or Pisācha Branches )

| | | |
|---|---|---|
| Sina, Gilgiti | : | má |
| Chilāsī | : | mā |
| Rāmbani | : | ammā |
| Maiyā | : | māi |

## இந்தோ- ஆரியன் கிளைகள்
## ( Indo- Aryan Branches )

| | | |
|---|---|---|
| Prakrit | : | māā, māi, mau, māuā, māyā |
| Kētrāni | : | mā |
| Lahndā, of Shahpur | : | mā, ammā |
| Multāni | : | mā |
| Hindki | : | mā |
| Talī | : | mā |
| Danni | : | mā |
| Tināuli | : | ammā |
| Tināuli of Salt Range | : | mā |
| Pōtwāri | : | mā |
| punchi | : | mā |
| Sindi, vicholi | : | mau |
| Lāri | : | mā, ama |
| Kachchi | : | mā |
| Nāgpuri | : | māy |
| Sinhalese | : | mawa, ammā |
| Oriyā | : | mā |
| Bihari, Maitili | : | māe |
| Magahi | : | māi, maiā |
| Bojpuri,- Northern | : | māi |
| Bojpuri,- Southern | : | māi |
| Nagpuriā | : | māy |
| Bengali ( written ) | : | mā |
| (Spoken) | : | mā |

| | | |
|---|---|---|
| South- western | : | mā |
| Siripuriā | : | mā |
| Eastern | : | mā |
| of Cachar | : | māī |
| of Chittagong | : | mā |
| Chākmā | : | mā |
| Eastern Hindī, | | |
| Awadī | : | ammā |
| Western Hindi, | | |
| Hindōstānī | : | mā |
| Vernacular | | |
| Hindostānī | : | mā |
| Daknī | : | mā |
| Bāngarū | : | mā |
| Braj Bākā | : | ammā, maiyō |
| Kanauji | : | maiyā |
| Pañjābi, ( written ) | : | mā, māī |
| Powādi | : | mā |
| Dōgri | : | mā |
| Kāngrā | : | mā, ammā |
| Gujarātī, ( Standard ) | : | mī |
| Charōtarī | : | mā |
| Kātiyāwādi | : | mā |
| Kārwa | : | mā |
| Rājastani, Mārwārī | : | mā |
| Jaipuri | : | mā |
| Mēwātī | : | mā |
| Gujurī of Hazara | : | mā |
| Mālvi | : | mā |
| Nimādi | : | mā, māya |
| Kandēsi | : | mā, māy |
| Bīli | : | mā |
| Eastern Pahāri ( or ) | : | |
| Kas-kurā | : | āmā |

| | |
|---|---|
| Central Pahāri | |
| Kumauni | : mai |
| Garwāli | : mā |
| Sirmaurī | : māē |
| Bagāti | : ammā |
| Kiutali | : āmā |
| Kului | : ammā |
| Mandeālī | : māō, māī |
| Chameali | : mā |
| Gādī | : mā |
| Badrawāhī | : āmmā |
| Dumāki | : māma |
| Tirāhī | : mā |
| Gilgiti dialect of Shina | : mā |
| Kohistāni, Palesi | : |
| dialect of Shina | : mā |
| Gurēsi dialect of Shina | : māh |
| Awankāri dialect of | |
| Lahnda | : mā, māī |
| West Pahāri, Curāhi | |
| dialect of west pahārī | : mā |
| Gangoī dialect of | |
| kumaunī | : me |
| Assamese | : mā, māu, māī |
| Lakhīmpurī dialect of | |
| Awadhi | : māī |

## பிற மொழிகளில்

| | |
|---|---|
| Samoīede | : amma |
| Estrian | : emma |
| Finnish | : emā |
| Hungerian | : ema |
| Hebrew | : ēm |
| Syriac | : āmo |

| | | |
|---|---|---|
| Parji | : | amma |
| Greek | : | mama, mamme |
| Oscan | : | amme |
| Old High German | : | amma |
| Old saxon | : | amma |
| Malayan | : | amā |
| Tibetan | : | mā, mō |
| Swahili | : | mama |
| Portuguese | : | māe |
| Rumanian | : | mamā |
| Icelandic | : | amma |
| Chinese | : | mā |
| Sumerian | : | eme |
| Akkadian | : | ama. amu |
| Indonesian | : | amai, umai, yāma |
| Mon-Khmer | : | ama, ma |
| Munda | : | umā, māy. mā-in |

அம்மா > ( சமற்கிருதம் ) ambā = அம்மா ; நல்ல பெண்டு.

அம்மா என்ற செந்தமிழ்ச் சொல்லினின்று திரித்தொலித்துப் பயன்படுத்தப் பெற்ற இச் சமற்கிருத வடிவத்தினின்று,- ambayā, ambādā, ambāla, ambāli, ambi, ambika போன்ற ஒட்டு வைத்த ஆக்கங்களும் அம் மொழியில் தோற்றுவிக்கப்பெற்றுள்ளன.

" அம்மா " என்னும் தமிழ் வடிவத்தின் தோற்றவுண்மையையும் அதனின் மிக நீண்ட நெடிய வரலாற்றுப்பதிவுகளையும்- தமிழிய இன மொழிகளில் அதுபதிந்துள்ள ஆழநிலைகளையும்- அதனின் உலகக் கொடைநிலைகளையும் அறியாமல் சமற்கிருத- ஆங்கில அகராதியைத் தொகுத்த அறிஞர் மானியர் வில்லியம்சு அவர்கள்,- தவறாகத் தம் நூலில் இவ்வாறு குறித்துள்ளார்.

[ " In the South-Indian languages ambâ is corrupted into ammā and is often affixed to the names of goddesses, and females in general ] [ Monier William's Sanskrit- English Dictionary- page : 83 ]

அயலக அறிஞர்கள் பலரிடமிருந்து இம் மேற்குறித்தவாறான தவறான முடிபுகளைக் கொண்ட பன்னூற்றுக்கணக்கான திடுதிப்பான வெளியீடுகள்- உலகெங்கணும் புறம் போந்துள்ளன ! இத்தகு தவற்று நிலைகளை அடிப்படையாகக் கொண்டு மேன்மேலும் பன்னூற்றுக் கணக்கான தவற்று முடிபுகள் ஆங்காங்கும் தொடர்ந்து மேற்கொள்ளப் பெறுகின்றன ! தமிழிய மொழியறிஞர்களின் உண்மையை நோக்கிய உழைப்பு ஒன்றே- இந்நோய்ப்பாட்டு நிலைகளைத் தணிப்பதற்கான மருந்து ஆகும்.

**அம்மானை :**

மூன்று அல்லது அதற்கும் மேற்கொண்ட எண்ணிக்கையுடைய பந்துகள் அல்லது ஆட்டக்காய்களை ஒன்றொன்றாக மேல் நோக்கிக் கையால் தட்டியெறிந்துத் தரையிற் கீழ் விழும் முன்னர் அவற்றை ஒன்றொன்றாகப் பிடித்துக்கொண்டே அம்மானை அல்லது அம்மானாய் என்று முடியும் வரிகளைக் கொண்ட பாட்டைப் பாடிக்கொண்டு பெரும் பாலும் மூன்று பெண்கள் கூடியமர்ந்தாடும் தமிழகத்தின் மகளிர் ஆட்ட முறை ஒன்றனுக்கு " அம்மானை " என்பது பெயர்.

உறுப்பிசை (stanza) தோறும் "அம்மானை" என்றோ- '' அம்மா னாய் ''என்றோ ஈற்றில் வருமாறு அமைத்துப்பாடும் இவ்வகைப் பாவில் முதற்கண் ஒரு கூற்றும்-'அடுத்தவாறு அக் கூற்றினின்று கொள்ளத் தக்க ஒருவினாவெழுச்சியும்- இறுதியில் அவ்வினாவிற்கேற்ற பொருந்திய விடையும் அமைந்திருக்கும்.

பல்வரிக் கூத்துள் ஒன்றாகிய இம் மகளிர் விளையாட்டு வகை,- கடைக் கழகக் காலத்தில் நன்கு வழக்குடைதாகியிருந்து பரவலான பயில் வும் துய்ப்பும் கொண்டிருந்தமையைச் சிலப்பதிகாரத்தின் வாழ்த்துக் காதையின் ( சிலம்பு : 29 ) அம்மானை வரிப் பாப்பகுதிகள் நமக்குத் துலக்கமாக்கிக் காட்டுகின்றன !

விளையாடுகையில் ஒருவர் கருத்திற்கொண்ட பொருளைப்பற்றி வினாவெழுப்புதலும்- மற்றையவர் அதற்கு விடைகூறுதலுமாக அம்மா னைச் செய்யுள்கள் அமைந்திருத்தலும் பொதுவழக்கே !

சில நிலைகளில் வினாவின்றியே " அம்மானாய் " என ஈற்று நிலை அமையுமாறு செய்யுள் அமைத்தலும் தமிழகத்தில் வழக்கிலிருந்தது.

" அம்மானை " ஆடும்போது பயன்படுத்தப்பெறும் ஆட்டப் பந்தும் ( அல்லது- ஆட்டக்காயும் ) அம்மானை... ( > அம்மனை) என்ற சொல்லாலேயே குறிப்பிடப்பெற்றது.

அம்மனை = அம்மானையாடுங்காய்.

( எ டு ) " அம்மனை தங்கையிற் கொண்டங் கணியிழையார்
தம்மனையிற் பாடுந் தகையேலோ ரம்மானை "
( சிலம்பு : வஞ்சி : வாழ்த்து : 29 : 19 : 1-2 )

" அம்மானை " என்பது மிகப் பொதுப்பட்ட வழக்குப் பயில்வும்- " அம்மனை " என்பது மிகச்சிறப்புப்பட்ட இலக்கியப் பயில்வும் கொண்டன.

மகளிர் இருவரிடையே வினா-விடையமைப்பில் பாடியாடிக் கொள்ளும் ஏந்துபாட்டிற்குரிய வகையில் கலித் தாழிசையில் யாக்கப்பெற்ற அம்மானைப்பாட்டு,- " அம்மானை மடக்கு " என்னும் இலக்கிய வகையுள் அடக்கப்பெற்றது.

" அம்மா " என்னும் முறைப்பெயரும்- " அன்னை " என்னும் முறைப்பெயரின் விளியான " அன்னாய் " என்னும் சொல்லும் சேர்ந்த கூட்டுச்சொல்லாகிய "அம்மானாய்" என்ற விளியினின்று- ஒழுங்கமைப்புற்ற வடிவமே இவ் " அம்மானை " என்பது ஆகும்.

அம்மா + அன்னாய் > அம்மான்னாய் > அம்மானாய்

(எ-டு) " அங்கருணை வார்கழலே
பாடுதுங்காண் அம்மானாய் ! " ( திருவாச : 175 : 6 )

அம்மானாய் > அம்மானய் > அம்மானை.

(எ-டு) " ஒப்பரிய திருவிளையாட்
டுறந்தையிலோ வம்மானை! "
( தனிப்பா : தி : 1 ; பக் ; 170 )

அம்மானை > அம்மனை,

ஃ அம்மா + அன்னாய் > அம்மான்னாய்
அம்மான்னாய் > அம்மானாய்
அம்மானாய் > அம்மானய் > அம்மானை
அம்மானை > அம்மனை.

( இச் சொல் அருமைபற்றி வந்த மீமிசைச் சொல் ஆகும்! )

( ஒ.நோ : தாய் + அம்மை > தாயம்மை. )

**அம்மா அரிவை :**

கழக இலக்கியங்களில் " அம்மா அரிவை " என்றவாறு அடையடுத்த பெண்பாற்சொல் ஒன்று- பல இடங்களில் பயிலப் பெறுகின்றது.

( காண்க : ( நற் : 81 : 7 ; 120 : 9 ; 192 : 7 , புறம் : 147 : 5 : குறள் : 1107 : 2. ) இவ்விடங்களிலெல்லாம் பயில்வுறும் " அம்மா " என்பது அழகிய மாமை நிறத்தைச் சுட்டும் அடைக் குறிப்பாகும். இவற்றின் தெளிவுக்கு " அம்மா மேனி " = ( அழகிய மாமை நிறத்தினையுடைய மேனி ) என்னும் பொருளில் வரும் நற்றிணைத் தொடரையும் ( 134 : 7 ) , அகநானூற்றுப் பயில்வையும் ( 206 : 8 ) காண்க!

**அம்பாவாடல் :**

தைத்திங்கள் மாதத்தின் வைகறைப் பேர்ழ்துகளில் நீர்நிலைகளுக்கோ அல்லது ஆற்றுக்கோ சென்று திணிமணல் கொண்டு பாவை வடிவத்தைச் செய்து வைத்துத் தனக்கு நல்ல உயர்ந்த கணவன் வாய்க்க வேண்டும் என்றவாறு கன்னிப் பெண்ணானவள் நோன்பு மேற்கொண்டு நீராடி வரும் வழக்கம் பண்டைக் காலத்தில் தமிழகத்தில் பரவலாக இருந்தது. இவ்வகை நீராடலுக்குத் " தைந்நீராடல் " என்பது பெயர்.

நல்ல கணவன் வேண்டித் தைமாதத்தின் வைகறைப் போழ்துகளில் கன்னிப்பெண் மேற்கொண்ட பண்டைத் தவமுயற்சியிது!. நோன்பு

வழக்கங்களில் இதுவுமொன்றாக இருந்தது! தைந் நீராடும் இத் தவமாகிய நோன்பைப் பண்டைத் தமிழ்க் கன்னியர் மேற்கொண்டு வந்தமையைக் கழக இலக்கியங்கள் பல இடங்களில் படம் பிடித்துக் காட்டுகின்றன !

சான்றுகள் :

(1) " தையில் நீராடிய தவம் தலைப் படுவாயோ "
(கலி : 59 : 13)

(2) " தவத் தைந்நீர் ஆடுதல் " ( பரி : 11 : 91 )

(3) " இன்ன பண்பின் நின் தைந்நீராடல் "
( பரி : 11 : 134 )

எதிர்காலத்தில் தனக்கு வந்து வாய்க்கவுள்ள நல்ல கணவனைக் கற்பிதஞ் செய்து- அவனை வண்டற்பாவை வடிவிற் செய்து வேண்டி வழிபட்டு நோன்பு மேற்கொண்டவாறு நீராடிய வழக்கம் தமிழகத்தில் இருந்தது.

ஒ.நோ : "... ... ... ... ... ... ... ... ... ... ... பொன்னிக் கரையின் மணற்பாவை நின் கணவனா மென்று உரைசெய்த மாதரொடும் ." ( சிலம்பு. வஞ்சின : 21 : 6-8 )

பண்டைத் தமிழக் கன்னியரின் பொது வழக்கான " பாவை விளையாட்டு"- தாம் வேண்டி விரும்பிய வாழ்வியலோடு பிணைந்து நின்ற அடுத்த வளர்ச்சிப் படிநிலையுடையதாகும்!

பாவை விளையாட்டு- பண்டைத் தமிழகத்தில் பரவலான வழக் காற்றில் இருந்தமையைப்-

" பணைத் தோள் குறுமகள் பாவை தைஇயும்" எனவரும் குறுந் தொகைப் பாடல் பகுதியாலும் ( குறுந் : 276 : 1 ),

" பாவையும் விளையாட " எனவரும் கலித்தொகைப் பாடற் குறிப்பாலும் ( கலி : 59 : 5-6 ) அறியலாம்.

இப்போது " பிள்ளைத் தமிழ் " என வழங்கும் நூல் வகை- பிள்ளைப்பாட்டு என்றவாறும் அழைக்கப்பெற்றது. அப் பிள்ளைப் பாட்டில் பாவையாடலும் கன்னியர்க்குரிய பகுதி என்பது, " பனிநீர் தோய்தலும் பாவையாடலும் " என்றவாறு ஒரே வரித் தொடரால் திவாகர நிகண்டிலும் ( பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த்தொகுதி ), பிங்கல நிகண்டிலும் ( பட்டுத்துய்த்தல் வகைத் தொகுதி- ( அநு போக வகைத் தொகுதி ) பிசகில்லாது குறிப்பிடப் பெற்றுள்ளமையால் விளங்கும்.

பாவைப்பாட்டுகள் யாவும், " பாவாய்! பாவாய்! " என முடியும் ஈற்று நிலைகளைக் கொண்டனவாகும்.

திருப்பாவைப் பாடலில் ஆண்டாள் குறித்துள்ள " வையத்து வாழ்வீர்காள்! நாமும் நம் பாவைக்குச் செய்யும் ' கிரிசைகள் ' கேளீரோ ! " ( திருப்பா : 2 ) என்னும் வரியின் வழிப்- பல்வேறு சடங்கு முறைமைகள் இப் பாவை நோன்பின்போது மேற்கொள்ளப் பெற்றன என்னும் செய்தியினை அறிகின்றோம். " ஆய் தொடிக் கன்னியர் முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப் பனிப்புலர்பு ஆடி " எனவரும் பரிபாடலடிகள் ( பரி : 11 : 81-82 ) சடங்குகளை அறிந் தோரான முதுபெண்டிர் அக் கன்னியருக்கு நோன்பு பூண்டு நீராடும் முறைமைகளைக் காட்டிய பண்டைச் செய்தி இதனை முற்பட நிலை நிறுத்திக் காட்டுகின்றது!

மாலிய வகுப்பினரால் பாடப்பெறும் ஆண்டாளின் திருப்பாவை யும்- சிவனிய வகுப்பினரால் பாடப்பெறும் திருவெம்பாவையும் எம் பாவாய்!- ( எம் பாவையே! ) என்றவாறு ஈற்றுநிலை கொண்டு இயல் கின்றமை இவ்விடத்திற் கருதிப் பார்க்கத் தக்கதாகும்.

அழகியதாகச் செய்யப்பெற்ற பாவையைத் ( அம் + பாவை ) திணிமணலால் அல்லது வண்டலாற் புனைந்துருவாக்கி நோன்பு மேற் கொண்டு நீராடும் பண்டைத் தமிழக் கன்னியரின் ஆடல் வழக்கத்திற்கு " அம்பாவை ஆடல் " என்னும் பெயர் வழக்கத்திலிருந்தது.

அம்பாவை ஆடல் > அம்பாவையாடல் > அம்பாவாடல்

பேச்சு வழக்கால் இங்ஙனம் கெடுதல் திரிபெய்திப் புணர்ந்து " அம்பாவாடல் " என்றவாறு எளிமைப்பட்டுப் பொதுவியல்பாகி- இலக்கியப் பதிவிலும் இடம் பெற்றுள்ளது.

[ " வீரையன்பட்டினம் " என்றவாறிருந்த் புதுச்சேரி மாநிலத்தி லுள்ள ஒரு கடற்கரைச் சிற்றூர்ப் பெயர் " வீரையான்பட்டினம் " என்றாகி, இன்றைக்கு " வீராம்பட்டினம் " என்றவாறு வழங்கிவரும் திரிபு நிலை- ஒரு புடையில் இன்ன தன்மையுடையதே! ]

" வெம்பா தாக வியனில வரைப்பென
அம்பா வாடலி னாய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்புலர் பாடி............. " என்றவாறு வரும் பரிபாடலின் 11- ஆம் பாடலின் 81- ஆம் வரியிலுள்ள " அம்பாவாடல் " என்னும் சொல்லாட்சியின் மரபு வழக்கையும் பொருட்காரணத்தையும் உணராது பின்றைப் பதிப்பாசிரியர் பலரும் முறையற்ற- பிழையான சீர்பிரிப்பால் குறித்து வருகின்றனர்.

" அம்பா ஆடல் "- என்றின்னவாறு சீர் பிரித்துப் போட்டு வரும் நிலையால்- அதற்கே அமைந்திருந்த உண்மைச் சீரையும் கூடக் குலைத்துப் பிழைப்பாராகின்றனர்!

இம் மேற்குறித்த பரிபாடல் பாட்டு வரிகளுக்குப் பொருளெழுதிய பரிமேலழகர் " அம்பாவாடலென்று தைந்நீராடற்குப் பெயராயிற்று, தாயோடாடப்படுதலின் " என்றவாறு அம்பாவாடலுக்குக் குறித்துள்ள உரைக் குறிப்பே- இம் மேற்குறித்த பிழைக்குக் காரணக் கருவும்- அப் பிழையின் தொடர்ச்சிக்குரிய வாய்க்காலுமாகத் தோன்றுகின்றது!

" தாய் அருகா நின்று தவத்தைந்நீர் ஆடுதல் " (பரி : 11 : 91) என்னும் பரிபாடல்வரி தரும் காட்சியை உளப்படுத்திக் கொண்டவாறே " அம்பாவாடல் " என்னும் சொல்லைப் பிறழவுணர்ந்த பரிமேலழகர் மரபறியாது பொருளுரைத்துள்ளார். இப் பொருள்பிறழ்ந்த திரிபுரையாலேயே பிழையின் தொடர்ச்சிப்பாடு தொடரியாகி நிற்கின்றது!

" அம்பா " என்னும் தமிழினின்று திரிந்த சமற்கிருதச் சொல்லுக் குத் " தாய் " என்றவாறு பொருள் குறித்துவிட்டுப் பரிபாடலிலுள்ள

இம் மேற்குறித்த வரியையே சான்றுக்கு இழுத்துப் போட்டுப் பதிப்பித்துள்ள செ. ப. க. அகராதியின் பதிவு முயற்சியானது- முன்னைப் பிழையை அடியொற்றிய பின்னைப் பிழைப் பதிவே!

( காண்க : செ. ப. க. அ : மடலம் : 1 பக் : 96 )

" அம்பாவாடல் " என்னும் சொல்- அம்பா என்னும் சொல்லொடும், அம்மா என்னும் பொருளொடும் தொடர்பற்றது என்ற உண்மையைத் தெளிவிப்பதற்கும்- அது " அம்பாவை ஆடல் " என்பதன் திரிபு வடிவமே என்பதைக் குறித்து நிறுத்திக் காட்டுவதற்குமே இம் மேற் குறிப்பிட்ட விளக்கங்கள் முன்வைக்கப் பெற்றன.

**அம்மை > அவ்வை**

அம்மை > அவ்வை ( மகர வகரத் திரிபு )
( ஒ. நோ : செம்மை > செவ்வை )

அவ்வை = தாய்.
" அவ்வைக்கு மூத்த மாமன் " ( சீவக ; 1046 )

அவ்வை = புகழ் வாய்ந்திருந்த பெண்பாற் புலவர் ஒருவரின் பெயர்.
" அவ்வை பாடலுக்கு " ( பாரத. சிறப்புப்பாயி ; 8 )

அவ்வை = தவப்பெண் ( சூடா. நி. )

அவ்வை = சைன சமயத் தவப்பெண் ( மணி : 11 : 137 )

அம்மை > அவ்வை = தாய்.
(1) " அவ்வை உயிர்வீவுங் கேட்டாயோ தோழி "
( சிலம்பு : 29 : 5 : 4 )
(பொருள் : தோழி! தாய் உயிர் நீத்ததனைக் கேட்டாயோ!)

அவ்வை = முதியாள்
" அவ்வை மகளிவள்தான் " (சிலம்பு : 29 : 8 : 3)

அவ்வை > ஔவை = தாய்.

ஔவை = தவப்பெண் ; சைன சமயத் தவப்பெண்.

" கூந்தலை ஔவைமார்கடாம்
பணிவிலர் பறித்தனர் " ( சீவக : 2637 )

அவ்வை > ஔவை.

ஒ. நோ : (1) கவ்வை > கௌவை = அலர்.

எ. டு : 1-1 " 'கவ்வை'யால் கவ்விது காமம் அது இன்றேல்
தவ்வென்னும் தன்மை இழந்து "
( குறள் : 1144 )

1-2 " ஊரவர் 'கௌவை' எருவாக அன்னை சொல்
நீராக நீளும் இந் நோய் "
( குறள் : 1147 )

(2) பவ்வம் > பௌவம்

(3) கவ்வுளி > கௌளி

ஒ. நோ : பல்லி. ( பல் + து > பற்று )

(4) நவ்வி = பெண்மான்
( தொல் : பொருள் : 612

" சிறுதலை நவ்விப் பெருங்கண்
மாப்பிணை " ( புறம் : 2 )

நவ்வி > நௌவி

" பெருங்கவின் பெற்ற
சிறுதலை நௌவி " ( மதுரை : 275 )

அவ்வை என்னுஞ் செந்தமிழ்ச்சொல்லின் பிறமொழித் திரிபுகளாவன :

### தமிழிய மொழிகளில் :

| | |
|---|---|
| Kota | : av = mother |
| Toda | : af, afuf |
| Kannada | : avve, avva<br>abbe = mother<br>( Avve > abbe ) |
| Kodagu | : avve |
| Tulu | : abbè |
| Telugu | : avva |
| Parji | : avva = ( father's mother ) |
| Gadba | : avve = Old woman |
| Gondi | : avva |
| Sanskrit | : avvā = mother |
| Prakrit | : avvā = mother |
| Marathi | : avā, avāji : term of courtesy in addressing a Sūdra woman |

### TIBETAN GROUP

| | |
|---|---|
| Tauchū | : au = mother |

### NAGA GROUP

| | |
|---|---|
| Tangkul | : ā-va |
| Kangoi | : ā-wū |

### KUKI-CHIN GROUP

| | |
|---|---|
| Thayetmyo Chin | : au = mother |

### LUI GROUP

| | |
|---|---|
| Chairel | : au = mother |

### BURMA GROUP

| | |
|---|---|
| Mrū | : a-ū |

## INDO - ARYAN BRANCH

Konkani : āvai

[ துணைக் குறிப்பு : " தவ்வை " பற்றிய விளக்கம் ]

[ தா + அவ்வை > ( தாவ்வை ) > தவ்வை = தாய்

( ஒ. நோ : தா + ஆய் > தாய் என்றாகினாற்போன்று- )

தவ்வை = தாய்.

(1) " ஐயையும் தவ்வையும் விம்மிதம் எய்தி "
(சிலம்பு : 16 : 52 )

(2) " பட்டோன் றவ்வை படுதுயர் கண்டு " (சிலம்பு. 15 : 80)

தாய்க்குரிய பெயரான தவ்வை- என்னுஞ் சொல் பின்னர்- அக்கையாளையும் ( காண்க : " தாரை தவ்வை தன்னொடு கூடிய" ( மணி : 7 : 104 ) அதன் பின்னர்த் திருமகளென்னுங் கற்பனைப் பெண்தெய்வத்தின் அக்கையாகிய ( மூத்தாளாகிய ) மூத்ததேவியையும் ( காண்க : " செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும் " குறள் : 167 ) குறித்துப் பயிலப் பெறுவதாயிற்று. ]

**ஆய் !**

ஆ + ஈ > ஆஈ > ஆயீ > ஆயி > ஆய்.

இயற்கையான உணர்ச்சியொலிகளில் முதலாவதானதும் இரண்டாவதானதும் ஆன- நெட்டுயிர்ப்பொலிகளாகிய " ஆ " என்பதையும் " ஈ " என்பதையும் தொடர்ந்தொலிக்கக் கற்று ஆஈ > ஆயி > ஆய் என்றவாறு வளர்ச்சிப்பட்டுவிட்ட அவ் வொலியால்- தன்னை ஈன்ற தாயை முதற்கண்ணும்- அவள்வழித் தெரிந்துகொண்ட தன்னை ஈன்புறச் செய்த தந்தையை இரண்டாங்கண்ணும் விளிக்கவும்- பின்னர் சுட்டவும் மாந்தன் தெளிந்தமை சொல்லியல் வரலாற்றில் முதலாந்தரத்தன !

" ஆயி " என்பதுவும் " ஆய் " என்பதுவும் முற்பொழுதுகளில் விளிநிலைகளிலேயே இருந்து- பிற்பாடு பெயர்நிலைகள் பெற்றுள்ளன !

" ஆய் " என்னும் அவ் விளிச் சொல்லைத் தாய்க்கும் தந்தைக்கும்- ( ஆண்பாற்கும் பெண்பாற்கும்- ) பொதுவாகச் சுட்டி வந்த உண்மை நிலை " ஆய் " என்பதுவே- தாயைக் குறித்த சொல்லாகவும்- பெண் பாலின் எதிர் பாலதாகிய ஆண்பாற் குறித்துத் தந்தைக்குரிய சொல்லாகவும் வழங்கியுள்ள நிலைகளாற் புலனாகின்றது !

" ஆய் " - என்னும் கடையெழு வள்ளல்களில் ஒருவனுக்குரிய இயற்பெயரே இதனை மெய்ப்பிக்கப் போதுவதாகும். " ஆய் " என்னும் அரசவள்ளல் " ஆய் அண்டிரன் " என்னும் பெயராலும் குறிக்கப் பெற்றுள்ளான். (காண்க : " ஆர்வ நன்மொழி ஆயும்" (சிறுபாண்: 99) " ஆய் எயினன் " என்னும் பெயரிய குறுநில மன்னன் ஒருவனும் இத் தமிழகத்தில் ஆட்சி செலுத்தியுள்ளான். ஆக, "ஆய்" என்னும் பெயரை ஆண்பாற் பெயராகவும் மேற்கொண்டு வந்த வழக்கமானது இம்மொழி யுள் உள்ளமை பெறப்படுகின்றது !

**ஆய் = தாய்**

தாயைக் குறித்து வழங்கிய மிக முதுதொடக்கப் பழஞ்சொற்களுள் ஒன்றான " ஆய் " என்பது பண்டைத் தமிழிலக்கியங்களில் தனிப் பதிவெய்தவில்லை ! " அய் " - என்னும் நுண்மைக் கருத்து வேர்ச் சொல்லின்வழி நுணுகுதற் பொருளில் விரிவு பெற்ற கருத்துச் சொற்கள் பல வடிவுகளெய்தி வழக்கத்திலிருந்தமையும்- "உய்" என்னும் சுழற்சிக் கருத்தின் வேர்சொல் வழியே விளர்ந்த " அய் " என்னும் பக்கவேர் மேலும் பல விரிவுகள் உற்றுச் சொற் பெருக்கேறி வழக்கிலிருந்தமையும் இதற்குரிய முகமைக் காரணங்களாகும்.

(1) ஆய்தல் = நுணுகுதல்

" ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம் "

( தொல். சொல்: உரி : 32 )

ஆய்தல் = ஆய்வுசெய்தல்

ஆய்தல் = கலந்தாய்தல் ( பிங்கலம் )

ஆய் = நுண்மை " ஆய்தொடி அரிவையர் "
( புறம் : 117 : 10 )

ஆய் = சிறுமை " ஆய்நுதன் மடந்தை "
( புறம் : 249 : 10 )

ஆய் = மென்மை " ஆய்கரும்பின் கொடிக் கூறை "
( புறம் : 22 : 15 )

(2) நுண்மையடிப்படையில் அழகுப் பொருளும் விளர்ந்தது.

அய் > ஆய் = அழகு.
" ஆய்பொறி யுழுவை " (கலி : 46 : 4 )

ஆய்தல் = அழகமைதல்.
" ஆய்ந்த மோட்டினவான் " ( சீவக : 2395)

(3) உய் > உய் + அல் > உயல்.

உயலுதல் = அசைதல் " உயலுங் கோதை "
( பதிற். பத் : 52 : 17 )

உய் + அவு > உயவு = வருந்து.
உயவு + தல் > உயவுதல் = வருந்துதல்.
" உண்டென வுணரா வுயவு நடுவின் "
( பொருந : 38 )

உய் + அவு > உய்வு = வருத்தம்
" உயவு நோய் கைம்மிக " ( கலி : 58 )

உயவு + அல் > உயவல் = வருத்தம்
" சிதாஅ ரோம்பி யுடுத்த வுயவற் பாண "
( புறம் : 69 )

உயவு > உயா = வருத்தம்.
" உயாவே உயங்கல் "
( தொல் சொல். உரி : 71 )

உய் > அய் ( உகர அகரத் திரிபு )
அய் > அய் + அவு > அயவு > அயாவு = வருந்து.

அயாவுதல் = வருந்துதல்
'' மானயா நோக்கியர் '' ( சீவக : 1822 )

அய் > ஆய் = வருத்தம். ( அக. நி. )

(4) '' ஆ '' என்றவாறு ' ஆமா ' க் குறித்த சொல்லினின்று தோன்றிய ஆ + ( ய் ) + அம் > ஆயம் (காண்க: சிலம்பு: 17 : உரைப்பாட்டு மடை : 5 ), ஆ + ( ய் ) + அர் > ஆயர் ( = இடையர் ) ( காண்க : '' ஆயர் வேட்டுவ ராடூஉத் திணைப்பெயர் '' ( தொல். பொருள் : 21 )- ; ஆயம் > ஆய். ( ஆய்மகள் = ( இடைச்சாதிப்பெண் ). காண்க : பெரும் : 162 ; முல்லை : 13; கலி : 110-9; புறம் : 33 : 2, 215-4, 276-4; சிலம்பு : 17 : 14 : 2 ) முதலியன போன்ற சொல்லினப் பெருக்கமும்- இவ் '' ஆய் '' என்னும் தாயைக் குறித்த தனிப்பெரும் பண்டைச் சொல்லை ஓரம் ஒதுக்கியுள்ளன.

மே. கா : ஆயம் + செவிலியர் > ஆயச் செவிலியர்
( சிலம்பு : 27 : 211 )

ஆயம் + அத்து + அவர் > ஆயத்தவர்
( கலி : 102-7 )

ஆயம் + அத்து + ஆர் > ஆயத்தார்
( ஐங் : 380 : 5. குறுந் : 351 : 7 )

ஆயம் + மகள் > ஆயமகள்
( கலி : 101 ; 38, 101 : 64, 67, 70 ; 105 : 52 ; 107 : 19 ; 110-9 )

ஆயம் + மகன் > ஆயமகன்
( கலி : 105 : 66 )

ஆய் = இடைச்சாதி ( சீவக : 426 )

[ ஓ. நோ : ஆய்க்குடி = இடைச்சேரி
ஆய்ப்பாடி = இடைச்சேரி ]

ஆய் ( = தாய் ) என்னும் சொல்லின் உண்மைத் தோற்றத்தை உள்ளடக்கியவாறு சில கூட்டுச்சொற்கள் பின்னிப் பிணைந்த வடிவங்களில் உள்ளன. பண்டைப் பழமைப் பயில்வு உண்மையை அவை காத்து வருவது வியப்புக்குரியதாயுள்ளது.

" யா "- என்னும் ஒலி, " நான் " என்னும் கருத்துப்பொருளில் பயன்படுத்தப் பெற்ற பண்டைத் தொடக்கவொலிகளில் ஒன்று. (இவற்றின் விரிந்த விளக்கங்களை விரைவில் வரவுள்ள எம்மின் " யா " என்னும் தனிநூலில் கண்டு கொள்ளுக !)

யா > யா + ஆன் > யான் = நான்.
யான் > ஞான் > நான்.

மே. க : யா + அம் > யாம் = நாம்.
யாம் > ஞாம் > நாம்.

மிகு நனி தொடக்கத்தில் " நான் " என்னும் தன்மைப் பொருள் குறித்து வழங்கிய இந்த " யா " என்னும் சொல்லும்- " ஆய் " என்னும் தாயைக்குறித்த சொல்லும் கூட்டுற்று யா + ஆய் > யாய் என்னும் வடிவில் 'என்னுடைய தாய்' என்னும்பொருளில் பெருவழக்குற்றிருந்தது.

"யாய்" என்னுஞ் சொல், கழக இலக்கியங்களில் 67 இடங்களில் பயிலப் பெற்றுள்ள பரப்புண்மையில்- இதனின் பண்டைப் பயில்வின் பழமையை மிகத் தெளிவாக உணர முடிகின்றது.

யா + ஆய் > யாய் = என் தாய் ; என் அன்னை.

காண்க :

(1) "...............................பண்டும்
இனையை யோவென வினவினள் யாயே ! ( நற் : 55 : 6-7)

(2) " செல்வல் கொண்க செறித்தனள் யாயே "
( நற் : 258 : 2 )

(3) " உய்ய உயிர்த்தனள் யாயே " ( நற் : 368 : 9 )

(4) " யாயே கண்ணினும் கடுங்காதலளே " ( அகம் : 12 : 1 )

மிகப் பரந்த பரவலான வழக்கால்- " என் தாய் " என்னும் சிறப்புக் கூட்டுச் சொல்லான " யாய் " என்பது " நற்றாய் " என்னும் பொருளுக்கும்- பின்னர்ச் செவிலித்தாய் என்னும் பொருளுக்கும்- பின்னர் அதனினும் பொதுப்பட்டுத் " தாய் " என்னும் பொதுப் பொருளுக்கு மாகப் படர்ந்து பயிலப் பெறுவதாயிற்று.

யாய் = நற்றாய்.

" அணங்குடைப் பனித்துறை கைதொழு தேத்தி
யாயும் ஆயமோ டயரும் " ( அகம் : 240 : 8-9 )

யாய் = செவிலித்தாய்

" யாய் ஓம்பினள் எடுத்த தடமென் தோளே "
( அகம் : 18 : 17-18 )

**யாய் = தாய்**

" உவக்குந ளாயினும் உடலுந ளாயினும்
யாயறிந் துணர என்னார் தீவாய்
அலர்வினை மேவல் அம்பல் பெண்டிர் "
( அகம் : 203 : 1-3 )

யகர ஞகரத் திரிபேற்று " யாய் " என்பது " ஞாய் " என்றவாறு மூச்சொலி சிறந்து முன்னுற்றும் வளர்ந்தது.

யாய் > ஞாய் = 1. என் தாய்
2. நின் தாய்

" ஞாய் " என்பதுவும்- " யாய் " என்னுமாறு போலவே " என்தாய் " என்னும் பொருளுடையதேயாயினும்- காலத்திற்குத் தேவைப்பட்ட கருத்துப் பெருக்க வளர்ச்சி நிலையில், முன்னிலை குறித்த சொல்லாகி முற்குறித்தவாறும் வழங்கத் தலைப்பட்டது.

( எ. டு )

" ஆயர் மகனையும் காதலை கைம்மிக
ஞாயையும் அஞ்சுதி யாயின் அரிதரோ
நீயுற்ற நோய்க்கு மருந்து "
( கலி : 107 : 25-27 )

ஞாய் = ( முதற்பொருள் ) என் தாய்.
வளர்ச்சிப்பொருள் = நின் தாய்.

" ஞாய் " என்பது மேலும் பொதுப்பட்டவாறு- " தாய் " என்னும் பொருளிலேயும் வழங்கப்பட்டமை, ஞாய் + ஆர் > ஞாயர் = ( தாய்மார் ) என்ற சொல்லாட்சிப் பதிவுகளாகக் கழக இலக்கியங்களில் சிலவற்றில் காணக் கிடைக்கின்றமையிற் புலனாகின்றது.

(எ. டு) (1) " பெருந் தெருவிற் கொண்டாடி ஞாயர் பயிற்றத்
திருந்துபு நீ கற்ற சொற்கள் "
( கலி : 81 : 12-13 )

(2) " ஞாயர்பால் உண்டி சில "
( கலி : 85 : 28 )

(3) " தண்டுவென் ஞாயர் மாட்டைப் பால் "
( கலி : 85 : 36 )

தான் என்னும் தன்மைகுறித்த முற்பேற்றையுடைய- என் தாய் என்னும் பொருளையுடைய சொல்லாகிய ( யா + ஆய் > ) யாய் என்பது முன்னிலை குறித்தும் வழங்கிய வழக்குண்மையை "நுந்தையும் யாயும் கடியரோ நின்னே " என வரும் ஐங்குறுநூற்றின் 98- ஆம் பாடலின் வரியொன்றால் தெள்ளிதின் அறியலாம்.

இவ்விடத்தில்- " யாயும் ஞாயும் யாராகியரோ " எனத் தொடங்கும் குறுந்தொகையுள் வரும் செம்புலப்பெயனீரார் அவர்களின் 40-ஆம் பாடலில் உள்ள முனைப்பட்ட வரி நன்கு சிந்திக்கத் தக்கதாகும்.

யாயும் ஞாயும் யாராகியரோ : ( உரை = ) " என் தாயும் நின் தாயும் ஒருவருக்கு ஒருவர் என்ன உறவுடையவர் ஆகுவர் ?

இங்கு " யாய் " என்னும் சொல்லுக்கு "என் தாய் " என்ற பொருளும்- "ஞாய்" என்னும் சொல்லுக்கு "நின்தாய்" ( உன்னுடைய தாய் ) என்ற பொருளும் உரைக்கப் பெற்றுள்ளன. கருத்து விளங்கித் தோன்றுவதற்கென இப் பொருட் கூற்று முறை ஓரளவுக்குச் சரியேயா யினும் " ஞாய் " என்னும் சொல்லுக்கு " நின் தாய் " என்னும் பொருட்பாடு சொல்லமைப்பாக்கத்தின் மூலக் கருவில் இல்லை என்பதை உணர்தல் வேண்டும்.

[ இச் செய்யுளில் இரண்டாம் சீராக வந்துள்ள " ஞாயும் " என்னும் சொல்லுக்குப் பகரமாக " யாயும் " என்ற வடிவமே இருந்து வந்துள்ளதென்றவாறு- 1894- இல் எழுதப் பெற்ற தாள்படியினின்று எடுத்த நுண்படமும் ( இலண்டன் நூலகத்தில் உள்ளது )- மதுரையில் 1899- இல் பெரும்புலவர். இரா. இராகவனார் அவர்களால் படியெடுக் கப்பெற்றுள்ள கையெழுத்துப் படிவமும் ( அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துள் உள்ளது- ) நமக்குக் காட்டி நிற்கின்றமை கருத்திற் கொள்ளத் தக்கன ! இம் மேற்குறிப்பிடப் பெற்றுள்ள பாட வேறுபாடு தமிழ் புரந்தந்த வள்ளல் உ. வே. சாமிநாதர் பெருமகனாராலும் சுட்டப் பெற்றுள்ளது.

யாய் ( = என் தாய் ). இச் சொல் தன்மையோடு தொடர் புடையது என்பது- " யாயென்பது தன்மையோடு ஒட்டுதலின் முறைப் பெயரெனினும் உயர்திணையாம் " ( தொல். பெயரியல். 26 ) என நச்சினார்க்கினியரும், " யாயென்பதோவெனின் தன்மையோடடுத் தமையின் முறைப் பெயரேனும் உயர்திணையெனப்படும் " எனக் கல்லாடரும் வரைந்துள்ள உரைப் பகுதிகளால் தெளிவுற்று நிற்கின்றது. ]

ஆக, யாய் (யா + ஆய்) என்பதுவும், ( யாய் > ) ஞாய் ( யகர ஞகரத் திரிபு ) என்பதுவும் என் தாய் என்னும் ஒரே பொருளடிப் படையிலேயே தோன்றிக் காலவட்டத்தில் தன்மை முன்னிலை என்னும் ஈரிடத்தும் பொதுப்பட வழங்கும் பிறழ்வுப்பேறு பெற்று நிற்கின்றன என்பது மொழியியல் வழங்கும் உண்மையாகும்.

எம் + ஆய் > யாய் என்றானது- என்றவாறாக முற்குறிப்பில் பிழை பாடாகக் குறித்துவிட்டுப் பின்னர் - நம் + ஆய் > நாய் என்றாகி அதன்

பின்னர் அதுவே " ஞாய் " என்றாயுள்ளது என்றும்- அது நம் அன்னை என்னும் பொருளுடையது என்றும் பாவாணர் ஐயா அவர்கள் மிகத் தவறாகக் குறித்துள்ளார்கள்.

" நாய் " என்னும் வடிவம் ஒரு விலங்கையும் குறித்தலால் அம் மயக்கை நீக்குவதற்கு " ஞாய் " எனத் திரிந்தது என அவர் காரணங் காட்டியுள்ளமை மிக மிகப் பிழைபாடானதாகும். " ஞாயும் " ( குறுந்: 40 : 1 ) என்னும் சொல் " மோயும் " என்றவாறு இருத்தல் வேண்டும் என்றும்- இத்தகு மரபு வழுக்கள் கடைக் கழகக் காலத்திலேயே தோன்றி விட்டன என்றும் கூறியுள்ள அவரின் கருத்துகளும் இந் நிலைக்குப் பொருத்தமானவையல்ல ! ( காண்க : " பண்டைத் தமிழ நாகரிகமும பண்பாடும் " பக்கம் : 89-90 )

தொல்காப்பியம் எச்சவியலில் உள்ள பதினான்காம் நூற்பாவுக்கு தெய்வச்சிலையாரால் வரையப் பெற்றுள்ள தவறான விளக்கவுரையைப் பின்பற்றி மேற்கொண்டமையால் இம் மேற்கண்ட பிழைபாடுகள் நேர்ந் துள்ளனவாகத் தெரிகின்றது.

ஆய் = தாய்.

" அம் முலை நல்கிய ஆய் என உவந்தனன் "
( ஞானாமிர்த : 35 : 10 )

ஆய் + ஆய் > ஆயாய் > ஆயா = ஆய்க்கு ஆய்; தாயின் தாய்; பாட்டி.

( ஒ. நோ : அம்மா + அம்மா > அம்மாம்மா > அம்மம்மா = தாயைப் பெற்ற பாட்டி )

ஆய் + அள் > ஆயள் > ஆயாள் = பாட்டி.

" அள் " என்னும் பெண்பாலீற்றை " ஆய் " என்னும் பெண் பாற் பெயருடன் பிணைத்துக் கட்டியது- சொல்லியல் வரலாற்றில் மிகப் பிந்துநிலையுடையதாகும்.

ஆய் > ஆயி = தாய். ( திருப் : 156 )
ஒ. நோ : கருப்பாயி ; பொன்னாயி ; மாரியாயி .

( ஆய் ஆயி ) என்னும் சொல்லின் படிவுகளும் திரிபுகளுமாவன :
தமிழிய ( திரவிட ) மொழிகளில் :

| | | |
|---|---|---|
| Kannada | | : āyi |
| Kolami | | : ay |
| Parji | | : ayal ; iya |
| Gadba ( ollari ) | | : aya ; ayal |
| | ( S ) | : āya |
| Gondi : | ( Tr ) | : yāyāl |
| | ( M ) | : yāyo |
| | (Mu) | : Ayal |
| | ( G ) | : iyāl |
| Konda | | : aya ; yāya |
| Pengo | | : aya ; iya |
| Manda | | : aya |
| Kui | | : aia, aiali, ia |
| Kuwi | | : ( F ) īya |
| | | aiya = woman |
| | ( S ) | iya = mother |
| Kuruk | | : ayang |
| Malto | | : ayya = my mother |

ASTRO- ASIATIC- LANGUAGES
Mundā Group

| | |
|---|---|
| Savara | : yā |
| Gadabā | : ayyānī |

MAN LANGUAGES

| | |
|---|---|
| Lanten-yao | : iō |
| Man-lan-tiēn | : yi |

TIBETO-BURMAN LANGUAGES
Himalayan Languages

| | |
|---|---|
| Manchāti ( or ) Patni | : yā |

| | | |
|---|---|---|
| Chamba Lāhulī | : | yā |
| Kanāsī | : | yā |
| Tōtō | : | ā - i - o |

## TIBETAN GROUP

| | | |
|---|---|---|
| Hloke | : | a-yi |

## NĀGĀ GROUP

| | | |
|---|---|---|
| Semā | : | a-ca |
| Rengmā | : | ā-ju |
| Kēzāmā | : | ā-zo |

## KUKI-CHIN GROUP

| | | |
|---|---|---|
| Taungoa | : | i |

## BURMA GROUP

| | | |
|---|---|---|
| Maingoa ( or ) Ngachang | : | ajà |
| Me-gya | : | ayi |

## INDO- EUROPEAN FAMILY
## ARYAN- SUB - FAMILY

### Dardic ( or ) Pisācha Branch

| | | |
|---|---|---|
| Wai-alā | : | oie |
| Kalāsā | : | āya |
| Gawar-bati | : | jai |
| Pasai, Eastern | : | āi |
| Western | : | āi |
| Sinā, Gilgitī | : | āje |
| Chilāsi | : | ājeh |
| of Drās | : | āzē |

| | | |
|---|---|---|
| of Dāh-Hanū | : | āi |
| Poguli | : | yeí |
| Dōdā Sirājí | : | ī |
| Kōhistānī, Gārwī | : | yaī |
| Tōrwālī | : | yai |

INDO- ARYAN

| | | |
|---|---|---|
| Marāti, Dēsí | : | āī |
| Assamese | : | āi |
| Gisādi | : | āyī |
| Bili | : | āī |
| Sōdōchí | : | ī |
| Pangwālí | : | ī |
| Kului | : | yā |

ஆய் என்னும் சொல்வழி ஏற்பட்ட கடுந்திரிபுகளுட் சில :

தமிழிய மொழி :

| | | |
|---|---|---|
| Kuí | : | ija |

Indo- Aryan

| | | |
|---|---|---|
| Prakrit | : | ijja |
| Malvi Western- Pahārī | : | jijī |
| Jaunsārī | : | ijjī |
| Kiutāli | : | ījī |
| Kului | : | īj |
| Gādī | : | iji, íjaī |
| Pangwālí | : | ijji |
| Badrawāhí | : | hāj |
| Pādasi | : | yij |

ஆய் > ஆய் + ( ச் + ) சி > ஆய்ச்சி > ஆச்சி = தாய்

ஆய்ச்சி = 1. தாய் ( ஈடு : 6, 1, 4 )
2. பெண்
3. பாட்டி

ஆய்ச்சி > ஆச்சி = 1. தாய் ( ஈடு : 4, 3, பர. )
2. மூத்த தமக்கை.
3. மதிப்பு வாய்ந்த பெண்டிரைக் குறிக்கும் சொல்.

தாயைக் குறிக்கும் '' ஆச்சி '' என்னும் செப்ப வடிவம், மலையாளத்தில் இன்றும் தெளிவாகப் பயிலப் பெறுகின்றது.

'' ஆய் ''- என்னும் சொல்லொடு '' அம்மா '' என்னும் சொல் சேர்ந்த வடிவமாகிய (ஆய்+அம்மா>) ஆயம்மா என்னும் அருமைபற்றி வந்த மீமிசைச்சொல் தமிழிய மொழிகளுள் ஒன்றான நாய்க்கி மொழியில் ( '' ayma '' ) '' அய்மா '' என வழங்குகின்றது.

என்னின் தாய் என்னும் பொருள்படும் எம் ஆய் என்னும் இரு தனிச் சொற்களின் கூட்டு- Chanda மொழியில் மாயொ ( Māyo என்றவாறும்- கூவி ( Kuwi ) மொழியில் மாய ( Maiya ) என்றவாறும் அதே பொருளமைவுடன் அதனதனிலும் வழங்கி வருகின்றன.

ஆய் > ஆய் +( ச் ) + சி > ஆய்ச்சி > ஆச்சி = தாய்

ஆச்சி + ஆள் > ஆச்சியாள் > ஆச்சாள் = தாய்.

( எ-டு ) '' எங்களுடைய யாச்சாளுக்கு ஊறுகாய் ஆகாமல் ''
( தனிப் : 1 : 42 : 82 )

ஈ

ஈ = கொடு ; தா.

'' ஈ தா கொடு எனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகு இடன் உடைய ''
( தொல். சொல் : 9 : 48 )

ஈ + கு > ஈகு

ஈகு + அல் > ஈகல் = தருதல்; கொடுத்தல்
ஈகல் + ஆ + ( அ ) ன் > ஈகலான் = ஈயாதவன்
'' அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான் '' (குறள்: 863)

ஈ > ஈய் = தா; கொடு; நல்கு

ஈய் + க > ஈய்க > ஈக = தருக; நல்குக.

" இவற்கு ஈக என்னும் அதுவும் " ( புறம் : 289 : 7 )

ஈய்ந்து = தந்து

" யார்க்கும் ஈய்ந்து துயிலேற் பினனே " ( புறம்: 317 : 7 )

ஈய்ந்து > ஈந்து = தந்து     ஈந்தது = தந்தது.

" அலர் எமக்கு ஈந்தது இவ்வூர் " (குறள் : 1142 : 2 )

ஈ > ஈகு+ஐ > ஈகை = கொடை

ஒ. நோ : கொடு + ஐ > கொடை.

ஈ > ஈய் = தா; கொடு.

" தாயத்தின் அடையா ஈயச் செல்லா "

( தொல். பொருள் : 5 : 25 : 1 )

ஈ > ஈய் > ஈஞ் > ஈன்

( ஞகர னகரத் திரிபு )

ஈன் > ஈனு.

ஈனாப் பாவை : தான் பெறாது கோரையாலே செய்து வைத்துத் தன் மகவென முறைமை பாராட்டுதற்குற்ற பாவை.

" ஈனாப் பாவை " ( நற் : 127 : 7 )

ஈனாத்தாயர் = செவிலித் தாயர்.

" ஈனாத் தாயர் மடுப்பவும் உண்ணாள் " ( அகம்: 105:6 )

ஈனாள் = பெற்றுத் தராதவள்; பெற்றெடுக்காதவள்

" தாயே ஈனாள் ஆயி னளாயின் " ( புறம் : 348 : 7 )

ஈன் + இல் > ஈனில் = கருவுயிர்த்தற்கு உரிய கூடு; கருவுயிர்த்தற்கான இடம்.

(1) " சூன் முதிர் பேடைக்கு ஈனில் இழையியர் "
( குறுந் : 85 : 3 )

(2) " பேடைச் செவ்வி நோக்கி ஈனில் இழைக்க "
( பதினோ. திருவாரூ : 19 )

" Maternity Hospital " என்னும் ஆங்கிலக் கலைச்சொல்லுக் குரிய அருமையான மொழியாக்கமாகப் பயன்படுத்துதலுக்கு இச் சொல் மிகப் பொருத்தமும் சுருக்கமும் உடையதாயுள்ளமை காண்க! " மகப்பேறு மருத்துவமனை " என்னும் நாற்சொல்லின் நெடுங்கூட்டுப் பெயரினும்- மூவெழுத்தாலியையும் இவ்வரிய சொல்லின் அமைப்பு நிலை- அருமைப் பாடும் சிறப்புடைமையும் கொண்டிலங்கும் உண்மையைக் கருதுக!

ஈன் + தல் = ஈன்றல் = தருதல்; பெற்றெடுத்தல்.

" இன்சொல் இனிதீன்றல் காண்பான் " ( குறள் : 99 : 1 )

ஈன்றல் = குழந்தையைப் பெற்றெடுத்தல்

ஒ.நோ: ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய் " ( குறள் : 64 )

ஈன்ற தாய் = பெற்றெடுத்த தாய்.

" ஈன்ற தாயானும் பிறன்போல நோக்கப்படும் "
( குறள் : 1047 )

ஈன்ற + அவள் > ஈன்றவள்
ஈன்றவள் > ஈன்றாள் = ஈன்ற தாய்

(1) " ஈன்றாள் பசி காண்பான் ஆயினும் " ( குறள்: 656:1 )

(2) ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் " ( குறள்: 923 : 1)

தருதல், கொடுத்தல் பொருளில் உள்ள ஈனுதல் கருத்து- மிக மிக ஆழமாக எண்ணிப்பார்க்கத் தக்கதாகும்.

ஈதல் கருத்துள்ள தருதல் என்னும் சொல்லின் வினைச்சொல் " தா " என்பது ஆகும்.

தன்னைப் பிறப்பித்துத் தந்தவள் என்னும் பொருளில் ஈன்றாளைக் குறிக்கும் ''ஆய்'' என்னும் சொல்லோடு- ''தா'' என்னும் வினையடைச் சொல்லை வருமொழியாக முன்னிறுத்தி தா + ஆய் > தாஅய் > தாய் என்றவாறு ஒரு விளக்கப்பாட்டுச் சொல் உருவாக்கப்பெற்றுள்ளது. ஈன்று புறந்தந்த ஆய்- '' தாய் '' என்னப் பெற்றாள். (ஒ. நோ: ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே! '' ) ( புறம் : 312 : 1 )

தாய் : அன்னை

(1) '' தாய் என் கிளவி இயற்கையாகும் ''
( தொல். எழுத் : 8 : 63 )

(2) ''தாய் நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினும்''
( தொல். பொருள் : 1 : 42 : 5 )

(௩) '' புதல்வற் பயந்த தாய் தப வரூஉம்
தலைப் பெயர் நிலையும் ''
( தொல் : பொருள்: 2 : 19: 32-33 )

தாய்: மன்னனின் மனைவியாகிய (மன்னியும்) அரசியும்-ஆசானின் மனைவியும் — அண்ணனின் மனைவியும்— மகட்கொடுத்தவளாகிய மாமியாளும் தாய்போலவே கருதி அன்னவாறே அழைக்கவும் பெற்றனர்.

தாய் என்னும் சொல் மிகச் சிறப்பாகவும் உண்மையடிப்படையிலாகவும் ஈன்ற தாயை மட்டுமே குறித்துத் தோன்றியதென்றாலும்-படிப்படியே ஊட்டுந்தாயையும்- முலைத்தாயையும் -கைத்தாயையும்-செவிலித் தாயையும் குறித்தவாறும் வழங்கத் தலைப்பட்டது.

களவொழுக்கத்தில்- '' தாய் '' என்னும் சொல் சிறப்பாகவும் குறிப்பாகவும் செவிலித்தாயை மட்டுமே குறிக்கும் என்ற தொல்காப்பிய நூற்பா மிகவும் கவனிக்கத்தக்கது.

'' ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாய்எனப் படுவாள் செவிலி ஆகும் ''
( தொல். பொருள் : களவு : 34 )

இன்னவாறு- "தாய்" என்னும் சொல், பல்வகையில் தாயன்ன தன்மையிலிருந்தாரையெல்லாம் குறிக்கத் தலைப்பட்டமையால்- ஈன்ற தாயைக் குறிக்கப் புதிய தனிப்பெயர் தேவைப்படலாயிற்று. எனவே "நல்"- எனும் அடைமொழி பயிலச் செய்து நல் + தாய் > நற்றாய் என்றவாறு மூலத்தாய் தன் தகைமையை நிலைநிறுத்திக் கொண்டாள் !

நற்றாய் = ஈன்ற தாய்.

"போகிய திறத்து நற்றாய் புலம்பலும்"
(தொல். பொருள் : 1 : 39 : 7)

தாய் + அர் > தாயர் = தாய்மார்.
"தாமே செல்லும் தாயரும் உளரே"
(தொல். பொருள் : 1 : 40 : 2)

கருவுற்று உயிர்த்து ஈன்றவளாகிய தாய் (< தா + ஆய்) அக் குழந்தையைத் தான் அடைந்தமை (—பெற்றமை) காரணமாகப் "பெற்றவள்" ஆனாள். (ஒ.நோ: "பெற்ற தாய் நீயே" (திவ். இயற்-பெரிய திருவந் : 5)

பெறுதல் = (1) அடைதல். "கையுறப் பெற்றக் கால்"
(நாலடி : 5)

(2) ஈனுதல். "பெற்றாளொரு பிளளை யென்மனையாட்டி" (தனிப்பா:1 : 235 : 1)

(3) பிறப்பித்தல். "தான் பெற்ற புதல்வன்"
(நாலடி : 197)

அக் குழந்தையைத் தன் மகனாக அல்லது தன்மகளாகப் பெற்றவன் (-அடைந்தவன்) "பெற்றவன்" ஆயினான்! (ஒ. நோ : பெற்றவன் அளித்த 'மோலி' இளையவன் பெற") (கம்பரா : வீீட. 136)

பெற்றவன் > பெற்றான் = தந்தை

[மனைவியாக ஒருத்தியைப் பெற்றவனாகிய (-அடைந்தவனாகிய) கணவன் "பெற்றான்" எனவும் "பெற்றோன்" எனவும் குறிக்கப் பெற்றமை காண்க !

(1) " பெற்றான் பெறிற் பெறுவர் பெண்டிர் "
( குறள் : 58 :1)

(2) " பெற்றோன் பெட்கும் பிணையை ஆக ! "
( அகம்: 86 : 14 ) ]

பெற்றவளாகிய தாயும்- பெற்றவனாகிய தந்தையும் சேர்ந்து பெற்றோர் ஆயினார் !

பெற்றவர் = பெற்றோராகிய தாய்தந்தையர்.

" பித்தர்போற் பின்றொடர்ந்தனர் பெற்றவர் "
( பிரபுலிங். வசவண் : 3 )

பெற்றார் = பெற்றவர்.

" பெற்றார் தளை கழல "
( திவ். இயற் : 1 : 20 )

தாய் + (ச்) + சி > தாய்ச்சி = (1) தாய்ப்பால் கொடுப்பவள்.
(2) கருவுற்றோள்.
( யாழ்ப்பாண வழக்கு )

( ஒ. நோ. : பிள்ளைத் தாய்ச்சி > பிள்ளைத் தாச்சி )

தாய் என்னும் செந்தமிழ்ச் சொல்லின் படிவுகளும் திரிபுகளும் :

**தமிழிய மொழிகள் :**

| | |
|---|---|
| Malayalam | : tāyi |
| Kannada | : tāy ; tāyi ; tāye |
| Kodagu | : tāyi |
| Tulu | : tāyi |
| Telugu | : tāyi |
| Pengo | : teyhi |
| Badaga | : tai |
| Gondi | : dai |

## INDO - EUROPEAN FAMILY
## ARYAN SUB-FAMILY
### Dardic- (or) Pisācha Branch

Gypsy- European : dai
Gypsy- Syrian : dai

### INDO- ARYAN BRANCH

Chattīsgarī : dāī
Bagēlī : dāī

**ஆய் > அய்.**

இது நெடுமுதல் குறுகி நின்ற மாற்றம் !

" அய் " என்னும் ஒலி " ஐ " என்றவாறு ஒரு நெட்டெழுத்து வடிவேற்று நின்று ஒலித்தமை- தமிழியல் வரலாற்றில் வளர்ச்சிநிலை-யுடையதாகும்.

" அகரத்து இம்பர் யகரப் புள்ளியும்
ஐ என் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும் "
( தொல். எழுத் : 23 )

என்னும் நூற்பாவுள் இம் முந்தைய உண்மை உட்கருவாகப் பொதிந்திருப்பதை உற்று நோக்கின் உணரலாகும்.

[ மொழி மரபுப் பகுதியில் " போலி " என்னும் கருத்தமைவின் கீழ் அமைந்த இந் நூற்பாவுக்கு இளம்பூரணர்- நச்சினார்க்கினியர் ஆகிய இருவரும் குழப்பி வைத்த உரைகளை இன்றுகாறும் நன்கு அலசிப் பார்த்துத் திருத்த முயன்றோரில்- வேங்கடராசுலு ஐயா அவர்களும்-சிவலிங்கனார் அவர்களும் முன்னிற்கின்றனர்.

" அகரமும் யகர மெய்யும் சேர்ந்தும் ஐகாரமாகும் " என்பது வேங்கடராசுலு ஐயாவின் குறிப்புரை.

அகரத்தின் பின்னர் ' ' ய் ' ' என்ற எழுத்துச் சேர்ந்து இரண்டும் ' ' ஐ ' ' என்ற ஒலியைத் தரும் ' ' அகரத் திம்பர் யகரப் புள்ளியும் ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும் ' ' என்றார் ஆசிரியர். ...... ஐ— அஇ — அய் இம் மூன்றும் ஒன்றாயினும் அஇ என்பதில் உள்ள ' இ ' ஒலிக்கும் ' அய் ' என்பதன் ' ' ய் ' ' ஒலிக்கும் சிறிது வேறு பாடுண்டு. எனவே, அஇ என்பது ஐ ஆகவே மாற, ' ' அய் ' ' என்பது ' ஐ ' என்ற வடிவம் பெறுகின்றது என்றுணர வேண்டும். அதனால் அஇ என்பது ஐ என்ற ஒலிவடிவிற்குரியது என்பதும் அய் என்பது ஐ என்ற ஒலி வடிவிற்கும் வரிவடிவிற்கும் உரியது என்பதும் அறியலாம்- என்பது சிவலிங்கனாரின் குறிப்புரை. ]

தாயைக் குறித்த ' ' ஆய் ' ' என்னும் சொல்லின் அடுத்த நெடு முதல் குறுக்கமான ' ' அய் ' ' என்பது அடுத்த வளர்ச்சித் திரிபுற்று ' ' ஐ ' ' என்றாகிப் பெண்பாலைச் சுட்டும் பெயர்களைச் சமைக்கும் ஈற்றுநிலைப் பேற்றுத் தன்மையுடையதாயும் அமைந்தமை இவ் விடத்தில் கருதத் தக்கதாகும்.

ஒ. நோ : (1) பின் + ( ன் ) + ஐ > பின்னை
( நல் > ந. ) ந + பின்னை > நப்பின்னை.

(2) கண் + ( ண் ) + ஐ > கண்ணை.
( நல் > ந ) ந + கண்ணை > நக்கண்ணை

(3) செள் + ( ள் ) + ஐ > செள்ளை
( நல் > ந ) ந + செள்ளை > நச்செள்ளை

ஆய் > அய் > ஐ

ஐ + (ய்) + ஐ > ஐயை = தாய்.

தாயைக் குறித்தெழுந்த இச் சொல்- தாய்க்கும் மேலாகத் தமிழர் கருதிய பெண் தெய்வங்களைச் சுட்டவும் அன்னவரால் பயன்படுத்தப் பெற்றது.

வெற்றிக்கு உரியவளாகத் தமிழர் கருதி வழிபட்ட கொற்றவை என்னும் பெண் தெய்வத்தையே ( ' ' முற்றவை காட்டிக் கொற்றவை

பழிச்சி '' பெருங். இலாவண : 2, 31 ) இச் சொல்வழிச் சுட்டியதாகச் சிலப்பதிகாரப் பதிவுகளால் அறியப் பெறுகின்றோம்.

ஐயை = கொற்றவை.

'' ஐயை திருவின் அணிகொண்டு நின்ற''
( சிலம்பு : 12 : 5 : 1 )

ஐயை கோட்டம் = கொற்றவையின் கோயில்

(1) '' ஐயை கோட்டத் தெய்யா வொருசிறை ''
( சிலம்பு : 12 : 4 )

(2) '' ஐயைதன் கோட்டம் அடைந்தனர் ஆங்கென் ''
( சிலம்பு : 11 : 216 )

[ ஆய் ( ஆயி ) என்றவாறுள்ள தாயைக் குறித்த பெயர்களைப் பெண்டிர் தாங்கியிருந்த வழக்கை— மாரியாயி, கருப்பாயி, பொன்னாயி, செல்லாயி என்றவாறுள்ள இன்றைய நாட்டுப்புறப் பல்வேறு பெயர் வகைகளாலும் தெளியக் காண்குற முடிகின்றது.

முத்தரையர்பாளையம் என்னும் நல்லூரின் நாற்கூட்டுச் சந்திக்கு அருகிலுள்ள ஒரு குளம்,- அதை வெட்டித் தொட்டுச் சமைத்த '' ஆயி '' என்பாளின் பெயராலேயே '' ஆயி குளம் '' என்றவாறு அழைக்கப்பெறும் வழக்குண்மையைப் புதுச்சேரிவாணர் தெளியத்தெரிவர். ]

'' தாய் '' என்னும் பொருண்மையுடைய '' ஐயை '' என்னும் சொல்லைப் பெயராகவே வைத்து வழங்கும் வழக்கம் பயில்விலிருந்தமை- தித்தன் என்னும் பண்டைத் தமிழ் மன்னன் ஒருவனின் மகளுக்கு இப்பெயர் வழங்கியமையாலும் புலப்படும்.

காண்க : '' இழையணி பணைத்தோள் ஐயை தந்தை
மழைவளந் தரூஉம் மாவண் தித்தன் ''
( அகம் : 6 : 3-4 )

ஆயர் முதுமகளாகிய மாதரியின் மகள் ''ஐயை'' எனும் பெயரினளாயிருந்தமையைச் சிலப்பதிகாரத்திற் காணலாம்.

காண்க : (1) "என்மகள் ஐயை காணீர் அடித்தொழிலாட்டி"
(சிலம்பு : 16 : 11-12)

(2) "வைஎரி மூட்டிய ஐயை"
(சிலம்பு : 16 : 33)

(3) "ஐயையும் தவ்வையும் விம்மிதம் எய்தி"
(சிலம்பு : 16 : 52)

(4) "ஐயைதன் மகளைக் கூஉய்"
(சிலம்பு : 17 : 1 : 8)

பெண்தெய்வத்தைக் குறிப்பிடப் பயன்படுத்தியது போன்றே- தவக் கோலம் பூண்ட பெண்ணையும் "ஐயை" எனும் தாய்க்குரிய பெயரால் சுட்டும் வழக்கிருந்தது. (ஐயை = தவப்பெண்.) (பிங்.)

(ஒ. நோ.)

(1) "காவுந்தி ஐயையைக் கைதொழு தேத்தி"
(சிலம்பு : 14 : 16)

(2) "காவுந்தி ஐயை கைப் பீலியும் கொண்டு"
(சிலம்பு : 10 : 99)

(3) "காவுந்தி ஐயையுந் தேவியுங் கணவனும்"
(சிலம்பு : 10 : 246)

(4) "காவுந்தி ஐயையோர் கட்டுரை சொல்லும்"
(சிலம்பு : 11 ; 151)

"ஐயை" என்னும் சொல்— சிவையையும் (பார்வதி), காளியையும் சுட்டும் எனவும் பிங்கலம் சுட்டும்.

மே. கா :

ஐயை = 1. ஆசான் மனைவி (பிங்)

2. தலைவி (திவா)

3. மகள் (பிங்)

அய் + ( ய் ) + ஐ > அய்யை = தாய்.
அய்யை > அஞ்ஞை = தாய்.
( யகர ஞகரத் திரிபு )

(1) " குன்ற வேயில் திரண்ட என் மென்றோள் அஞ்ஞை."
( குறுந் : 15 : 18 - 19 )

(2) " மென்றோள் அஞ்ஞை சென்ற ஆறே "
( அகம் : 15 : 19 )

(3) " அஞ்ஞை நீ யேங்கி யழுவென்று "
( சிலம்பு : 9 : 24 )

(4) " அமர்க்கண் அஞ்ஞையை யலைத்த கையே "
( அகம் : 145 : 22 )

" அஞ்ஞை " என்பது தாயை மட்டுமே முதற்கண் சிறக்கக் குறித்தெழுந்த திரிபுச் சொல் ஆகும்.

இம் மேற் சுட்டிய பாடல்வரிகளின் பயில்வுகளில்- அன்பு மிகுதி பற்றி மகளையே " அஞ்ஞை " என்ற சொல்லால் அழைக்கும் மரபுக்கும் படர்ந்து தொடர்ந்து நின்றமையைக் காணலாகும். இன்றும் தாய் தன் மகளையே " அம்மா " என்றவாறு அழைக்கும் வழக்கைத் தமிழகத்திற் பரவலாகக் காணலாம்.

அய் > அய் + ( ய் ) + ஐ > அய்யை
அய்யை > அஞ்ஞை.

அஞ்ஞை > அன்னை = தாய்

யகரம் ஞகரமாதலும்
ஞகரம்- நகரமாதலும், னகரமாதலும் இயல்பு நிலைகளே.

திரிபுக்கான சான்றுகளாவன :

ய > ஞ

(1) மய் > மய் + இல் > ( மய்யில் ) > மயில் = கருநிறப் பறவை.

மய் + இர் > ( மய்யிர் ) > மயிர் = கரியமுடி.

மய் > மய்யை > மஞ்ஞை = மயில்

" மஞ்ஞை போல் ஏங்கி அழுதாளுக்கு "

( சிலம்பு : 9 : 24 )

ய > ஞ > ந

(1) யா = கட்டு.

யா + (ப்) + பு > யாப்பு = 1. கட்டுகை.

" கழல் யாப்புக் காரிகை நீர்த்து "

( குறள் : 777 )

2. கட்டு

" யாப்புடையாழ் " ( சீவக : 2011 )

யா + (த்) + தல் > யாத்தல் = கட்டுதல் ; பிணித்தல்

" யானையால் யானை யாத்தற்று "

( குறள் : 678 : 2 )

யாக்கை = கட்டுகை.

யாத்தல் > ஞாத்தல் = கட்டுதல் ( யாழ். அக. )

யாத்தல் > ஞாத்தல் = பொருந்துதல்.

" மண் ஞாத்த மழகளிறு தோன்றுமே "

( தொல். எழுத். : 146. உரை )

யா > யா + அண் > யாண் > ஞாண்

ஞாண் : 1. கயிறு

" திண் ஞாண் எழினி வாங்கிய "

( முல்லைப் : 63)

2. வில்லின் நாண்

" சாப நோன்ஞாண் " ( புறம் : 14 : 9 )

( மே. கா : ) அரை ஞாண் : 1. அரையில் ( இடுப்பில் ) கட்டுங்கயிறு.

2. அரையணி. ( பிங். )

ஞாண் > நாண் : 1. கயிறு. ( சூடா. )
" மரப்பாவை நாணால் உயிர் மருட்டியற்று "
( குறள் : 1020 )
2. வில்லின் நாண்
" வஞ்சிலை வல்விற் புரிநாண் புடையின் "
( கலி : 15 : 2 )
3. அரைஞாண்
" நாணும் அரைத் தொடரும் "
( திவ். பெரியாழ் : 1, 2, 4 )

(2) யா + அர் > ( யார் ) > ( ஞார் ) > நார் = மட்டை முதலியவற்றின் நார்
1. " நாரில் முருங்கை " ( அகம் : 1 )
2. கயிறு. " நாரினாற் கட்டி "
( நாலடி : 153 )
3. வில்லின் நாண். "நாருள 'தனு' உளாய்"
( கம்பரா. நகர்நீங் : 156 )
4. உள்ளக்கட்டு;
உள்ளப்பிணைப்பு; அன்பு.
" நலத்தின்கண் நாரின்மை தோன்றின் "
( குறள் : 958 : 1 )

(3) ய > ஞ > ன
புய் > + அல் > புயல் = பொழியும் மழை
" ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங் குன்றிக் கால் " ( குறள் : 14 )
புயல் = நீர்
" மா 'மேகம்' பெய்த புயல் " ( சீவக : 2476 )
புயல் > ( புஞல் ) > புனல் : நீர்
" தண்புனல் பரந்த " ( புறம் : 7 )

(4) யாழ் > ஞாழ் = யாழ்.

" தன் ஞாழ் நவிற்றிய தாமரை யங்கை "
( பெருங். மகத : 6 ; 17 )

ய > ஞ > ண

புய் > + தல் > புய்தல் = பறிக்கப்படுதல்; கிழிவுறுதல்.
" புய்ந்து கால்போகிப் புலான்முகந்த வெண்குடை "
( களவழி : 39 )

புய் + ( த் ) + தல் > புய்த்தல் = பறித்தல்
" புய்த்தெரி கரும்பின் விடுகழை "
( புறம் : 28 )

புய் > பூய் > பூயை > பூசை ( யகர - சகரத் திரிபு )
பூசை = பூனை
" வெவ்வாய் வெருகினைப் பூசை என்றலும் "
( தொல். பொருள் : மரபி : 69 : 4)

புய் > பூய் > பூயை > பூஞை = பூணை.
பூஞை = பூணை ( பிங்.)

ஒ. நோ : கான் பூஞை = கான்பூணை ( பிங். )
பூஞை ' யாதனம் ' = பூணைபோல் முழங்காலை மடக்கிக் கைகளை ஊன்றி வானத்தைப் பார்த்தவா றிருக்கும் இருக்கைவகை.
( தத்துவப்பிரகாசிகை · 109 : உரை )

பூஞை = பூணை
" சிலம்பி சிச்சிலி பூஞை " ( தத்துவப் : 109 )

ஞ > ண

முஞ்ஞை
(1) " குறுநறு முஞ்ஞைக் கொழுங்கட் குற்றடகு "
( புறம் : 197 ; 11 )

முஞ்ஞை > முன்னை.

ஔவை. துரைசாமி ஐயா அவர்களின்
விளக்கக்குறிப்பில் :

" முஞ்ஞை யென்றது இப்போது முன்னைக்கீரையென வழங்குகின்றது. பசுமுன்னை, எருமைமுன்னையென்ற வகையிரண்டனுள், பசுமுன்னையே ஈண்டைக்குப் பயன்படுவது "
( புறம் : 197. உரைக்குறிப்பு )

(2) " முன்றின் முஞ்ஞையொடு முசுண்டை பம்பி "
( புறம் 320 : 1 )

(3) " தாளி முத னீடிய சிறுநறு முஞ்ஞை
முயல் வந்து கறிக்கு முன்றில் "
( புறம் : 328 : 14-15 )

( பழைய உரை : தாளிமரத்தின் அடியில் நீளப்படர்ந்திருக்கும் சிறிய நறிய முன்னைக் கொடியைக் குறுமுயல்கள் வந்து மேயும் முற்றம் ...... )

இவ்வகையில் நேர்ந்த திரிபு வகை- கீழ் குறித்ததற்கும் நேர்ந்தது.

அய் > அய் + (ய்) + ஐ > அய்யை

அய்யை > அஞ்ஞை ( யகர ஞகரத் திரிபு )

அஞ்ஞை > அன்னை ( ஞகர னகரத் திரிபு)

அன்னை = தாய்.

(1) " அன்னை சொல் நீராக " ( குறள் :1147 : 1-2 )

(2) " அன்னை கூறினள் புன்னையது சிறப்பே "
( நற் : 172 : 5 )

அன்னை = தாய் ; தாயே ! ( அண்மை விளி )

"அன்னாய் வாழிவேண்டு அன்னை"
(ஐங்குறு : 201 : 1)

(காண்க : அன்னாய்வாழிப்பத்து : 202- முதல்-210 வரை முதல் வரிகளில்- )

( அன்னை ) அன்னய் > அன்னாய் = தாயே ! ( விளி )

"செயலையம் பகைத்தழை வாடும் அன்னாய்"
( ஐங்குறு : 211 : 3 )

( காண்க : அன்னாய்ப்பத்து : 212 முதல் 220 வரை )

அன்னை என்னும் செந்தமிழ்ச் சொல்லின் திரிபுகள் :

AGGLUTINATIVE NON - INDIAN LANGUAGES

Ainu : unu
Turki : ānā, inā

AUSTRO - NESIAN LANGUAGES

Cham : inö
Salon : ànnon

SAKAI-SEMANG

Semang : nā

PALAUNG-WA

Āng-kū : nwe
Mong Lwe : nwē

MUNDĀ GROUP

Savara : yān

MAN LANGUAGES

Miao-tsu ( Hmōng ) : na
Pē-Miao : na

## TIBETO- BURMAN LANGUAGES

Aka : a-ni, ain
Miri : ā-nu, nā-nu
Daflā : ā-na

## LOLO-MOSO GROUP

Lahu : àna

## NĀGĀ GROUP

Banparā : ānū
Namsangiā : ìn- yōn
Chāng : ā- nu
Mōsāng : nū

## KACHIN GROUP

Chingpa (or )
Kachin : nū
Singpo : nū

## KUKI- CHIN GROUP

Tādo : -nū
Siyin : nū
Lai : anu
Lusēi : nù
Banjōgì : nū
Pānkū : nū
Hrāngkal : à- nū
Hallām : nū

| | | |
|---|---|---|
| Langrong | : | nū |
| Aimal | : | a- nū |
| Anāl | : | no |
| Hiroi- Lamgāng | : | a- nū |
| Chinbōk | : | nu |
| So ( or ) Kyang | : | a- nu |

## BURMA GROUP

| | | |
|---|---|---|
| Szi ( or ) Atsi | : | i- nō |

## INDO- EUROPEAN FAMILY
## ARYAN SUB- FAMILY

## ERANIAN BRANCH

| | | |
|---|---|---|
| Wachī | : | nan |
| Signī | : | nan |
| Sarīkolī | : | ana |
| Iskāsmi, Zēbakī | : | nan |
| Munjānī ( or ) Mungī | : | nēna |
| Yudgā | : | nīno |

## DARDIC OR PISĀCHA BRANCH

| | | |
|---|---|---|
| Basgali | : | nū |
| Wasi- veri ( or ) Veron | : | nān |
| Kōwār ( or ) Chitrāli | : | nan |
| Hindi | : | annī |
| Ostiak | : | ane; ine |
| Mordvin | : | ane |
| Hungarian | : | anya |
| Finnish | : | anya |
| Abazinian | : | innath |

[ அஞ்ஞை என்பதன் திரிபான "அஞ்ஞு" என்னும் பார்சி வழக்குச் சொல் அப்பாவின் உடன்பிறந்தாளைச் சுட்டுகின்றது. பிராகிருதமொழியில் அன்னை என்பது "அ ன் னீ" என்றவாறு வழங்குகின்றது. அப்பாவின் உடன்பிறந்தாள் என்பது பொருள். ]

ஆய் = தந்தை; தலைவன்

ஆய் + அன் > ஆயன் = தலைவன்; ஆசிரியன்

கணக்கு + ஆயன் > கணக்காயன் = ஆசிரியன்

ஒ. நோ : 1. இருங்கோன் ஒல்லையாயன் செங்கண்ணனார்

2. கணக்காயன் தத்தனார்

3. மதுரைக் கணக்காயனார்

"கணக்காயர் இல்லாத ஊரும்" ( திரிகடு : 11 : 1 )

ஆய் + அன் > ஆயன்

ஆய் + ஆன் > ஆயான் = ஆசிரியன்

ஆயான் = தந்தை ; தமையன்

( சொ. ஒ. த. அ ) ( பக் : 226 )

ய > ஞ

ஆயான் > ஆஞான் = தந்தை ( செ. ப. க. : 215 )

ய > ஞ ஒ. நோ : (1) அறியன் > அறிஞன்

(2) கலையன் > கலைஞன்

(3) இரிதல் = விலகுதல்; ( ஓடுதல் )
இரி+அல் > இரியல் > இரிசல் =
( 3-1 ) பிளவு (யாழ்ப்பாணவழக்கு)
( 3-2 ) மனமுறிவு (யாழ்ப்பாண வழக்கு )
இரி+அன் > இரியன் > இரிஞன் = பகைவன் ( திவா. )

ஆயான் > ஆசான் = தலைவன்; ஆசிரியன்
( யகர சகரத் திரிபு )

ஒ. நோ : நெயவு > நெசவு
குயவன் > குசவன்
நேயம் > நேசம்

**ஆசான் :**

கல்வி புகட்டும் ஆசிரியனும் தந்தையாகவே கருதப்பெற்றான். ஐங்குரவருள் அரசனுக்கு அடுத்தபடிநிலை மதிப்பினனாக ஆசான் கருதப்பெற்றான். ஐங்குரவராவர்- அரசன், ஆசான், தாய், தந்தை, தமையன் ஆகியோர் ஆவர். (காண்க : " ஐங்குரவர் ஆணை மறுத்தலும் " ( திரிகடு : 97 ). அவரில் இரு முதுகுரவராக முன்னிறுத்தப் பெற்றோர்- பெற்றோராகிய தாய் தந்தையர் என்னும் இருவராவர். காண்க : " இரு முது குரவர் ஏவலும் பிழைத்தேன் " ( சிலம்பு : 16 : 67 ) தந்தைக்குரிய மதிப்பு- ஆசிரியனுக்கும் பண்டைக்காலத்தில் தரப்-பெற்றது.

கழகக் காலப் புலவர்களில்- முக்கல் ஆசான் நல்வெள்ளையார் என்பது ஒருவரின் பெயர்.

**ஆசான் = ஆசிரியன்**

(1) " தண்டமிழாசான் சாத்தனிஃ துரைக்கும் "
( சிலம்பு : 25 : 66 )

(2) " ஆண்ஆக்கம் வேண்டாதான் ஆசான் "
( சிறுபஞ் : 27 : 1 )

(3) " உய்ப்பானே ஆசான் " ( சிறுபஞ் : 32 : 2 )

(4) " வல்லிதின் ' சீலம் ' இனிதுடைய ஆசானும் "
( திரிகடு : 26 : 2-3 )

ஆசான் = மூத்தோன்( திவா)

ஆசான் = வேள்வித் தலைவன்

" கேள்வியுள் கிளந்த ஆசான் உரையும் " ( பரி : 2 : 61)

ஆசான் = நட்டுவன் ; ஆடலாசிரியன்

(1) " ஆடற் கமைந்த ஆசான் தன்னொடும் "
( சிலம்பு : 3 : 25 )

(2) " தலைக்கோல் ஆசான் " ( சிலம்பு : 30 : 20 )

**ஆயான் > ஆசான்**

ஆயாள் > ஆசாள் = (1) தலைவி ( திவா )
(2) ஆசானின் மனைவி
( குருபத்தினி ) ( திவா )

**ஆய் > அய் > ஐ**

ஐ = (1) தந்தை
" தன் ஐ சேவடித் தாமரை "
( சீகாளத்திபுராணம் : நான்முக : 124 )
(2) தலைவன்
" என் ஐ முன் நில்லன்மின் தெவ்வீர் "
( குறள் : 771 : 1 )
(3) கணவன்
" எனக்கும் ஆகாது என் ஐக்கும் உதவாது "
( குறுந் : 27 : 3 )
(4) ஆசான் ( அகராதி நிகண்டு )
(5) அரசன் ( சூடா. நிக. )

ஐ + அன் > ஐயன் = தந்தை ( பிங் )

ஐயன் : (1) தந்தை ( பிங் )
(2) தலைவன்
( 2:1 ) " ஐய, அஞ்சுதும் அளியம் யாமே "
( நற் : 368 : 10 )
( 2:2 ) ஐயன் = தலைவன் ( -கோவலன் )
" அனநடை மாதரும் ஐயனும் தொழுது "
( சிலம்பு : 13 : 175 )
(3) உடன் பிறந்த அண்ணன்
காண்க: ஐயன்மார் ( கலி : 107 : 34 )

(4) உயர்ந்தோன் ( செ. ப. க. )

(5) ஆசான் ( பிங் )

(6) முனிவன் ( பிங் )

(7) அரசன் ( செ. ப. க. )

(8) பார்ப்பான் ( பிங் )

(9) சாத்தனார்

ஐ + அடிகள் > ஐயடிகள்
"ஐயடிகள் காடவர் கோனாயனார்" ( பெரியபு. )

ஐயன் + அப்பன் > ஐயப்பன் = ஐயனார்; சாத்தனார்
ஐயன் + பாழி > ஐயன்பாழி = சாத்தனார் கோயில்
"ஐயன்பாழியிலானை" ( ஈடு : 1,1,5 )

ஐயன்மார் = அண்ணன்மார்
( மக+ஆர் > மகார் > மார் = ஒரு பலர்பால் ஈறு )
( ஒ. நோ : தாய்மார்; அண்ணன்மார்; தம்பிமார் )
"தந்தையோடு ஐயன்மா ரெல்லா மொருங்கு"
( கலி : 107 : 34 )

தற்சுட்டுப் பெயர்களுள் ( Reflexive Pronouns ) ஒன்றான "தம்" என்னும் பண்டைப் படர்க்கைப் பெயரின் வேற்றுமையடியாகிய நிலை மொழியுடன்- "ஐயன்" என்னும் வருமொழி புணர்ந்து (தம் + ஐயன்>) தமையன் என்றாகியுள்ள இன்றைய வழக்குச் சொல்லானது- மூத்த உடன்பிறந்தானையே சுட்டி நிற்கும் உண்மை இவ்விடத்தில் கருதத் தக்கதாகும்.

தமையன் = தன் உடன் பிறந்த அண்ணன்
"தமையன் எம்மையன்" ( திருவாச ; 9, 13 )

ஐயன் = அண்ணன்
ஐயர் = அண்ணன்மார்.
ஒ. நோ : ஐயன்மார். ( கலி : 107 : 34 )

(1) " தன் ஐயர் பொருசமங் கடந்த " ( புறம் : 337 : 16-17)

(2) " அடுமுரண் முன்பின் தன் ஐயர் " ( புறம் : 350 : 8 )

(3) " தன் ஐயர் காலைத் தந்த கணைக் கோட்டு வாளை "
( அகம்: 126 : 7-8 )

(4) " நின் ஐயர் புலி மருள் செம்மல் நோக்கி "
( அகம் : 259 : 16-17 )

(5) " இருங்கல் அடுக்கத்து என் ஐயர் உழுத " (அகம் : 302: 9)

ஐ + அர் > ஐயர் = தந்தை- தமையன்மார் முதலியோர்

(1) " இளமா எயிற்றி இவைகாண் நின் ஐயர்
தலைநாளை வேட்டத்துத் தந்த ஆனிரைகள் "
( சிலம்பு : 12 : 14 : 1 )

(2) " கடல் புக் குயிர் கொன்று வாழ்வர்நின் ஐயர் "
(சிலம்பு : 7 : 17 : 1)

(3) " ஓடுந் திமில் கொண்டு உயிர் கொல்வர் நின் ஐயர் "
( சிலம்பு : 7 : 19 : 1 )

ஐயர் = குல முதியோர்

" ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும் "
( தொல். கற் : 5 : 3 )
( காண்க : பேரா. வெள்ளைவாரணனார் குறிப்புரை : தொல். கற் : 3 )

ஐயர் = தமிழின முன்னோர்

" பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப "
( தொல். கற் : 4 )

ஐயர் = சான்றோர்

" ஆசறு காட்சி ஐயர்க்கும் " ( குறிஞ்சி : 17 )
( காண்க : பேரா. வெள்ளைவாரணனார் குறிப்புரை : தொல். கற் : 3 )

ஐயர் = தெய்வ முனிவர்
"விண்செலல் மரபின் ஐயர்க்கு" (திருமுரு : 107)

ஐயர் = உலக நோன்பிகள்
"பெரும் பெயர் ஐயர்" (சிலம்பு : 10 :160)

ஐயன் = தந்தை. ஐயன் > ஐயா = விளி
"ஐயனும் ஈன்றோன் தன் பெயராகும்"
(பிங் : 907 : 2)

"ஐயன்" என்னும் செந்தமிழ்ச் சொல்லின் திரிபுகள் :
**தமிழிய மொழிகளில்**

| | |
|---|---|
| Malayalam | : ayyan = father, lord |
| Kota | : ayn = father |
| Toda | : in, eyi (voc) eya |
| Kannada | : ayya, aya |
| Kodagu | : ayye |
| Tulu | : ayye = Priest; teacher; master |
| Telugu | : ayya, aya = father |
| Kolami | : ayyā = mother's father<br>ayyāk = god |
| Gondi | : ēyāl = father |
| Pali | : ayya |

INDO- EUROPEAN FAMILY
ARYAN SUB- FAMILY
Dardic or Pisācha Branch

| | |
|---|---|
| Wasi- veri (or) Veron | : yā |

TIBETO-BURMAN LANGUAGES

| | |
|---|---|
| Abor | : yaii |

## UNCLASSED LANGUAGE

Burusaski : yū

## AUSTRO- NESIAN LANGUAGES

Malay : ā yàh

## AUSTRO- ASIATIC LANGUAGES

Sakai — Sēmang

*Sakai* : àyà
Sēmang : ē

## TIBETAN GROUP

Tanchū : ai

**ஆயா :**

குழந்தையரைப் பேணுவதற்கு அமர்த்தப் பெற்ற பணிப்பெண்டிரை அல்லது நாட்டுப்புறச் செவிலியரைக் குறித்து இந்நாடு முழுமையும் வழங்கும் ஒரு பெயர் " ஆயா " என்பதாகும். இச் சொல், தமிழ்ச் சொல் போல் ஒருவகை மருட்சியை ஏற்படுத்துந் தகைமையது. போர்ச்சு-கீசியர் இந் நாட்டுள் கொண்டு வந்து விடுத்த சொற்களுள் இதுவும் ஒன்றாகும் அன்னோரிடமிருந்து ஆங்கிலோ- இந்தியக் குடும்பத்தினர் இச் சொல்லை ஏற்று வழங்கினர். ஐரோப்பியர் இந்தியாவுள் ஆட்சி நிலையிலும் வணிக நிலையிலும் ஆழப் பதிந்த பின்னர், இந்திய நாட்டின் பெண்டிரைப் பணிப் பெண்டிராகப் பணிக்கு அமர்த்தி- அன்னவரை இந்த " ஆயா " ( Ayah ) என்னும் போர்ச்சுகீசியர் வழங்கிய சொல்லாலேயே தாமுங் குறித்தனர். தலைவனையும் பின்னர் அதன் வழியே ஆசானை யும் குறித்த அய் > ( ஐ ) என்னும் செந்தமிழ்ச்சொல் இசுப்பானிய ( Spanish ) மொழியில் " ayo " எனத் திரிந்து வழங்கியுள்ளது. யகர ஜகரத் திரிபின் வழி " ayo " என்னும் வடிவம் இத்தாலி மொழியில் " ajo " என்றாகியது. ayo என்னும் இசுப்பானியச் சொல்லின் பெண் பால் வடிவம் " aia " என்பதாகும். இவ்வடிவே போர்ச்சுகீசியரால்

இந்தியாவுக்குள் '' ayah '' என்ற வடிவில் கொண்டு வந்து வழங்கப் பெற்றது.

காண்க :

Ayah (aia)
(Pg.) : aia (sp.) : aya (It) : aja =
Children's governess
fem. of aio.
Sp. ayo It : ajo : tutor
(Page : 601)
(Compact edition of the Oxford English Dictionary
(Volume-1)

**அம்மா > அம்ப்பா > அப்பா**

தாயுடனிருந்த- தாய்க்குத் துணைவனாக வாழ்ந்த தன்னைப் பிறப்பித்தமைக்குக் காரணகனாகத் தாயால் சுட்டிக் காட்டப் பெற்ற தந்தையையும் தாயை விளித்த விளியாகிய அதே அம்மா என்பது கொண்டே மீமுந்தைய மாந்தன், அழைக்கவும் சுட்டவும் தொடங்கிப்-பின்னர் வலித்தமான ஒலிப்பாக அம்ப்பா > அப்பா என்றவாறு அதனைத் தனிப்படப்பிரித்து நிலைப்புச் சொல்லாக்கிக் கொண்டுள்ளான்.

மெல்லின மெய்ச்சொல்லால் மென்மை மிக்க தாய் (அம்மா) குறிக்கப்பெற்றமையும், வல்லின மெய்ச் சொல்லால் வன்மை மிக்க தந்தை (அப்பா) குறிக்கப் பெற்றமையும் இயற்கையொழுங்கின் போக்கைக் காட்டுகின்றன.

'' அம்மா '' என்றவாறே தந்தையைக் குறித்தும் வழங்கிய வடிவத்தின் குறுந்திரிபுப் படிவுகளை இன்றைய தமிழிய மொழிகளில் இருள் மொழியும் துளு மொழியும் தக்கவைத்துக் கொண்டிருக்கின்றமையும் ஈண்டுக் கருதத்தக்கன.

Irula : āmme = father
Tulu : amme = father

உலக மொழிகள் சிலவற்றில் இதன் படிவுகளாவன :

AGGLUTINATIVE NON - INDIAN LANGUAGES

Manchu : ama = father

AUSTRO- NESIAN LANGUAGES

Cham : amo = father

AUSTRO- ASIATIC LANGUAGES

Talaing : ( Written ) ma

" அம்மா "- என்றவாறு தந்தையைக் குறித்து வழங்கிய சொல் " ஹம்பெ " என்றவாறு சற்றுத் திரிபுற்று ஒட்டு நிலையுடைய "அய்னு" மொழியில் வழக்கிலிருப்பது கவனிக்கத்தக்கது.

Ainu : hambe = father

"அம்ப்பா" என்றவாறு இறுகியொலித்த வடிவம், முன்னிலைத் திரிபுற்று பல் படிவுகளில் திபெத்திய- பருமிய மொழிகள் சிலவற்றில் பதிவெய்தியுள்ளது.

காண்க : ( Tibeto- Burman Languages )

| | | |
|---|---|---|
| Sangpáng | : | ūm- pa |
| Lōhōrōng | : | um- pa |
| Lāmbichōng | : | im- pā |
| Dūngmāli | : | um- pa |
| Rōdōng (or) Chāmling | : | ūmpa |
| Kūlung | : | ūm- pā |

( LOLO- MOSO GROUP )

| | | |
|---|---|---|
| A- hi | : | imba |

அப்பன் = 1. தந்தை
"அப்பன் நீ அம்மை நீ" (தேவா: 6:95:1)

பொருள் விரிவுகள் :

(1) ஆண்பாற் பெயரீற்றுச் சொல்
(கண்ணப்பன்; நாகப்பன்; முனியப்பன்; நல்லப்பன்; செல்லப்பன்.)

(2) திறமையிற் பெரியவன்

(3) திருநாவுக்கரசு நாயனார் (உபதேசகா. கடவுள்: 7)

(4) வள்ளல்

**அப்பன் > அப்பர்**

(1) தேவார மூவருள் ஒருவரும் சிவசமயக் குரவர் நால்வருள் ஒருவரும் ஆன- திருநாவுக்கரசு நாயனார்.
"அப்பரே என அவரும் அடியேன் என்றார்"
(பெரியபு : திருநாவு : 182)

(2) தந்தையார்.
"விற்பரம ரப்பருள் வித்தகம ருப்புடைய
பெருமானே!" (திருப்பு : 3)

(3) (இறைவன் என்னும் முறையில் சிவன் எல்லாவுயிர்களுக்குந் தந்தை.) சிவன்.
"அந்நீர் முகந்து கொண்டேறி
அப்பர் கோயி லடைந்தகலுள்"
(பெரியபு : நமிநந்தி : 13)

அப்பா = அப்பன் என்னும் தந்தை முறைப் பெயருக்கு முந்தையில் விளிவடிவமாயிருந்த சொல். விளிப்பெயரே பின்னர் பெயர்வடிவாகவுங் கொள்ளப்பட்டது.

(ஒ. நோ : அம்மர் : (விளி.) அம்மா : (பெயர்)

சில கூட்டு வடிவங்கள் :

அப்பா + பாட்டன் > அப்பாப்பாட்டன் > அப்பாட்டன் = தந்தையின் பாட்டன்

அப்பா + ஆத்தாள் > அப்பாத்தாள் = தந்தையைப் பெற்ற பாட்டி

அப்பா + ஆத்தை > அப்பாத்தை = 1. தந்தையின் தாய்
2. அக்கை ; தமக்கை.

அப்பா + ஆய் > அப்பாய் = தந்தையின் தாய்.

அப்பா + ஆத்தாள் > அப்பாத்தாள் > அப்பத்தாள் =
1. தகப்பனின் தாய்
2. அக்கை

அப்பா + அச்சன் > அப்பாச்சன் > அப்பச்சன் =
1. தந்தையின் தந்தை
2. தந்தை (நாஞ்.)
( அருமைபற்றி வந்த மீமிசைச் சொல் )

அப்பா + அச்சி > அப்பச்சி = 1. பாட்டன் ( பள். )
2. தந்தை ( செட். நா. )
3. சிற்றப்பன்
( சொ. ஒ. த. அ. )

அப்பா + ஆய்ச்சி > அப்பாய்ச்சி > அப்பாச்சி = தாய்.

அப்பு = 1. அப்பன்
2. சிறுவரையும் கீழோரையும் அன்புகாட்டி அழைக்கும் சொல்.

மலையாளம் : அப்பு
கன்னடம் : அப்பு

## அப்பா- ( அப்பன் )- படிவுகள்- திரிபுகள் :

### ( திமிழிய மொழிகள் )

### Dravidian Languages

| | |
|---|---|
| Malayalam | : appan = father |
| | appu = affectionate appellation of boys |
| Kannada | : appa = father |
| | apa = father |
| | appu = affectionate appellation of boys |
| Kodagu | : appe = father |
| Tulu | : appa |
| Telugu | : appa |
| Gondi | : ā pōral = father |
| | (maipō = my father |
| | mī-āpō = your father ) |

### உலகமொழிகள் சிலவற்றில் :

### AGGLUTINATIVE NON- INDIAN LANGUAGES

| | |
|---|---|
| Ainu | : iyapo |
| Korean | : ăpi, ăpăji |

### AUSTRO-NESIAN LANGUAGES

| | |
|---|---|
| Malay | : băpă |
| Salon | : à păn |

## AUSTRO- ASIATIC LANGUAGES

### Mon kmēr

| | | |
|---|---|---|
| Kmēr | : | à puk |
| Talaing ( spoken ) | : | apà |

### Sakai- Sēmang

| | | |
|---|---|---|
| Sakai | : | àbē, àpà |
| Sēmāng | : | pā |

### Palaung- wa

| | | |
|---|---|---|
| Tai- loi | : | pa-u |
| Dana | : | pà- e |
| Yin (or) Riang | : | pà |

## KĀSI- GROUP

| | | |
|---|---|---|
| Wār | : | pà |

## MUNDĀ GROUP

| | | |
|---|---|---|
| Kerwārī Santālī | : | apā-t ( his father ) |
| Mundārī | : | āpū |
| Kūrkū | : | āba, bā |
| Kariā | : | apa |
| Juāng | : | bā, ābañji, bābā |
| Savara | : | Wā |
| Gadabā | : | ā pāṅg; abbānī |

## SINITIC LANGUAGES

### Tai- Chinese Group

| | | |
|---|---|---|
| Siamese ( Written ) | : | ba |
| Lu | : | pa |
| Kun | : | pa |
| Sàn | : | pa |

| | | |
|---|---|---|
| Āhom | : | po |
| Kāmti | : | pō |

## KAREN LANGUAGES

| | | |
|---|---|---|
| Pwo, ( literary ) | : | pā |
| Pwo- bassein | : | pà |
| Pwo- Maulmein | : | pà |
| Taungou | : | pà |
| Sga ( literary ) | : | pā |
| ( Spoken ) | : | bà, pằ |
| Bwè | : | pà |
| Wewaw | : | pe |
| Karenbyu | : | pà |
| Brao | : | pà |
| Karreni | : | pa |
| Yintala | : | pā |
| Sin- hma Mapauk | : | à pằ |
| Gheko | : | pà |
| Padaung | : | pà |
| Yeinba | : | pà |
| Mano | : | pā |
| Zayein | : | à pà |
| Mopwa, Bilichi | : | pà |
| Mopwa Dermuha | : | à pà, à pằ |

## MAN LANGUAGES

| | | |
|---|---|---|
| Lauten- yao | : | fā |
| Man- lan- tiēn | : | fa |

## TIBETO- BURMAN LANGUAGES

## HIMALAYAN LANGUAGES

| | | |
|---|---|---|
| Manchāti(or)patnī | : | bā |

| | | |
|---|---|---|
| Chamba Lāhuli | : | bā |
| Kamāsi | : | bā |
| Kanaurī | : | bōa, bōbā |
| Rangkas | : | bā |
| Dīmāl | : | a- bā |
| Tāmi | : | ā- pā |
| Limbū | : | pā, pā-pā |
| Yakā | : | bā, ī- pā |
| Kambū | : | pāā, pā |
| Bahing | : | ā- po |
| Bālāli | : | o- pa |
| Wāling | : | ā- pā, pā- pā |
| Chingtang | : | ū- pā |
| Rungch-enbūng | : | ō- pa, ūpa, ōpa |
| Nācherēng | : | ū- pa |
| Tulung | : | pāp, ū- pâp |
| Chaurasya | : | ā- po |
| Kaling | : | u- pāp |
| Dūmi | : | u- pyāp, u- pū, i- pyâp |
| Rai or Jimdār | : | pu |
| Vāyu ( or ) Hāyu | : | ū- pū |
| Gurung | : | ā- bā |
| Murmi | : | ā bā |
| Sunwār | : | pop- o |
| Magari | : | bai |
| Nēwāri | : | ba- bā, a - bu, bau |
| Padī, pahri ( or ) | : | |
| pahī | : | bā |
| Tōtō | : | ā- pā |
| Miri | : | ābū, bā bū |
| Dafla | : | āp, āb |

## LOLO- MOSO GROUP

| | | |
|---|---|---|
| Lolo- Ni | : | a ba |

| | | |
|---|---|---|
| A-hi | : | abao |
| Lo- lo- po | : | abo |
| A- Kō | : | à bā |
| Lisu | : | a- bà, bà, pà |
| Lisa ( or ) yayin | : | ā bà |
| Mo- so | : | abā |
| Lahu | : | à pà |
| Nung | : | a pē |

## TIBETAN GROUP

| | | |
|---|---|---|
| Manyàk | : | à pà |
| Takpà | : | a- pa |
| Haurpà | : | a- pà |
| Boti, Tibetan ( Written ) | : | apa, yab |
| ( Spoken ) | : | a- pa, yap |
| Ladaki | : | a- ba |
| of spiti | : | a- pa |
| Kāgatē | : | aba |
| Sarpa | : | pa- pa |
| Danjonkā | : | a- po |
| Hloke | : | ap |

## BARA GROUP

| | | |
|---|---|---|
| Bado (or) Bara | : | fä |
| Lālung | : | bā, fā |
| Dimā- sā | : | bū- pa |
| Gārō, Āchik | : | pā |
| Kōch | : | fā |
| Tipurā | : | fa,ba |

## NAGA GROUP

| | | |
|---|---|---|
| Angami | : | po, -pu |

| | | |
|---|---|---|
| Semā | : | ( a- ) pu |
| Rengmā | : | ( ā- ) Pfü |
| Kēzamā | : | ( ā- ) pfü |
| Sopvomā | : | ( a- ) pū |
| Hlōtā | : | ō pō |
| Tengsa | : | ā pu |
| Yachumi | : | ā pu |
| Tableng | : | pā |
| Banparā | : | a pā |
| Namsangiā | : | ā- pā |
| Chāng | : | a- pō |
| Empēo | : | ā pēo |
| Kabui | : | ā-po, ā-pü |
| Koirāo | : | ā- pa |
| Mikir | : | ā- po |
| Marām | : | ā- pā, ā- pā |
| Kwoireng | : | ā- pyū |

## KUKI GHIN GROUP

| | | |
|---|---|---|
| Meitei | : | pā |
| Tādo | : | pā |
| Siyin | : | pā |
| Lai | : | pà |
| Lusēi | : | pà |
| Banjogi | : | pā |
| Hramgkal | : | ā- pā |
| Hallam | : | pā |
| Langrong | : | pā |
| Aimal | : | a- pā |
| Hirōi- Lamgāng | : | a- pā |
| Taungoe | : | pā |
| Chinbōk | : | pā |
| Yadwin | : | pà-o |
| Chinbōn | : | pa- po |

| | |
|---|---|
| Thayetmyo Chin | : a pā |
| Sö ( or ) Kyang | : a- pō |

LUI GROUP

| | |
|---|---|
| Andro | : à- pà |
| Sengmai | : à po |
| Chairel | : à pà |
| Kadu | : a- wā |

BURMA GROUP

| | |
|---|---|
| Szi ( or ) Ātsi | : à-wà |
| Lasi ( or ) Lechi | : pa |
| Maru | : apa |
| Maingoa ( or ) Ngachang | : apa |
| Pun, Samong | : apá |
| Me- gya | : apā |
| Mrū | : pā |
| Burmese ( written ) | : apē |
| ( Spoken ) | : a-pe |
| Arakanese | : apā |
| Taungyo | : apa |
| Danu | : ape |
| Tavoyan | : apā, pàpā |

DARDIC (OR) PISĀCHA BRANCH

| | |
|---|---|
| Gawar- bati | : bāp, bāb |
| Sina- Gilgiti | : bābo |
| Chilāsi | : būbā |
| of Dras | : bābō |
| of Dah- Hanu | : bō, bāo |
| Pogulī | : baub |

| | | |
|---|---|---|
| Dōdā Sirājī | : | babb |
| Rāmbanī | : | bābb, bābbā, bābā |
| Kōhistāni, Gārwi | : | bab |
| Tōrwāli | : | bap |
| Gypsy- Syrian | : | bāb, bābō |

## INDO- ARYAN BRANCH

| | | |
|---|---|---|
| Prakrit | : | Vappō |
| Ketrāni | : | Peū, abbā |
| Lahndā, of Shahpur | : | peō |
| Mūltāni | : | pīū |
| Hindkī | : | piō, piū |
| Talī | : | peō |
| Danni | : | pio |
| Tināuli | : | peō, pe |
| of Salt Range | : | peō |
| Pōtwāri | : | peō |
| Punchi | : | peō |
| Sindī, Vichōli | : | piu |
| Lāri | : | pe, bābā, abā |
| Kachchi | : | pē, bāpā |
| Marati Dēsi | : | bāp |
| Nāgpuri | : | bāp |
| Koñkani | : | bāpuì |
| Oriyā | : | bābā, bopā |
| Bihāri, Maitili | : | bāp |
| Magahi | : | bāp, bapā, |
| Bojpurī, ( Northern ) | : | bāp |
| ( Southern ) | : | bāp, bābū |
| Nagpuriā | : | bāp |
| Bengali ( Written ) | : | bāp, bābā |
| ( Spoken ) | : | bāp, bābā |
| South- Western | : | bāpu |

| | |
|---|---|
| Siri puriā | : bāp |
| Eastern | : bāp |
| *of Cachar* | : bāp |
| Chākmā | : bāp |
| Assamese | : bāp |
| Eastern, Hindi | |
| Awadī | : bāp, bapai |
| Bagēli | : bāp |
| Western Hindi | |
| Hindōstāni | : bāppū |
| Daknī | : bāp |
| Bāngaru | : bābbu |
| Kanaujī | : bāpu |
| Bundēlī | : bāp |
| Banāpari | : bāp |
| Panjābi ( Written ) | : bāppū, bāpū |
| Dōgri | : bab, babbā |
| Kāngrā | : babb |
| Gujarāti ( standard ) | : bāp |
| Charōtari | : bāp, bāpā, bā |
| Kātiyāwādi | : bāpō |
| Kārwā | : bāpu |
| Gisādī | : bā |
| Rājastānī, Mārwārī | : bāp |
| Jaipurī | : bāp |
| Mewātī | : bāp, bābō |
| Gujuri of Hazarā | : bāpp |
| Mālvi | : bāp, bābā |
| Nimādi | : bāp |
| Labānī of Berar | : bāpū |
| Kandēsī | : bāp |
| Bīlī | : bāp, bā |
| Eastern pahāri ( or ) | |
| kas- kurā | : bābu, bā |
| Central pahārī | |

| | | |
|---|---|---|
| Kumaunī | : | bāb |
| Gatwālī | : | bābā |
| Western pāhārī | | |
| Jaunsārī | : | bābā |
| Sirmauri | : | bābā |
| Bagāti | : | bābā, bāpū, bāō |
| Kiutalī | : | bābū, bāō |
| Sodōchi | : | bāb |
| Kuluī | : | bāb, bābū, bāpū |
| Mandēali | : | bāb, bāpū |
| Chamēāli | : | bab, babb |
| Gāḍī | : | bab |
| Pangwāli | : | bau, babb |
| Badrawāhi | : | bau, bābō |
| Pādarī | : | bab, bāb |
| Sanskrit | : | appa = ( father ) |
| Prakrit | : | appa |
| | | ( அப்பா+ ஐயா > அப்பாயா > அப்பயா ) |
| | | appaya = father |
| Sanskrit | : | bāppa, bābba |
| Prakrit | : | bappa |
| Gypsy ( or ) Rōmaṇi | : | bap |
| Armenian dialect | | |
| of Gypsy | : | bap |
| Sumere- oceanian | : | ab |
| Melanesian | : | o'fa, apa |
| Polynesin | : | pa = term of respect denoting father |
| Indonesian | : | pa, apai, apang, aba, pa |
| Mon- khmer | : | pa, pā, pāpa, ipa, apa, āpe, apā,. apa = father<br>āpe = good father |

| | |
|---|---|
| Munda | : appā, appan |
| Sumerian | : ap, abha |
| Akkadian | : babu, apu |
| Egyptian | : ab, papa |

Abbot : தந்தை; குருமடத்தின் தந்தையாகிய தலைவர்

| | |
|---|---|
| ( Syriac ) | : abbā ( father ) > |
| ( Late Greek ) | : abbas > |
| ( Anglo- saxon ) | : abbod, ( abbad ) > |
| ( Middle English ) | : abbot, ( abbod ) > |
| English : abbot | : the father of an abbey |

( ஒ. நோ. : Abbot's bury. )

abbey : a religious house

( திருத்தந்தையின் மடம் )

Late Latin: abbāt, stem of abbas
abess = fem. of abbot

| | |
|---|---|
| French | : abbess |
| Latin | : abess |
| Greek | : abbess |
| Syriac | : abbess |
| M. English | : abbess |
| Latin | : papa, pappa |
| Finnish | : papa, pappa |
| German | : papa, pappa |
| Danish | : papa, pappa |
| Greek | : pappa |
| English | : papa, pop, poppa |
| English | : pope |
| Greek | : papas = literarily-father of the Roman catholic church |

| | | |
|---|---|---|
| Dameli | : | bāp |
| Nepāli | : | bāp |
| Maitili | : | bappā |
| Lakhimpuri dialect of awadhi | : | bāp |
| Sinhalese | : | bapa |
| Dumaki | : | baba |
| Areti dialect of Pashai | : | bāba |
| Shumashti | : | bāba |
| Savi | : | bāb, babu |
| Pahlvi | : | bābu |
| Gilgiti dialect of shina | : | bābu |
| Palasi dialect of shina | : | bubā |
| Kashmiri | : | bab; bāb |
| Rāmbāni dialect of Kashmīrī in Jammu | : | babb |
| Dodī ( a dialect of Kashmīrī in Jammu) | : | babbə |
| Kāṅgrā sub dialect of Dogri dialect of Panjābī | : | babb |
| Bhalesi dialect of West pahārī | : | bāb |
| Curāhi dialect of West pahāri | : | bapp |
| Cameālī dialect of west pahārī | : | babb. |
| Khasālī dialect of west pahārī | : | babb. ( Voc ) bāvā |
| Arāmaic | : | abba = the father, my father, ābh = father |
| Chaldian | : | abba |
| Syriac | : | abba (or) abbo |
| Hebrew | : | ābh |
| Arabic | : | āb |
| Greek | : | abba = father ( New Testament ) ( Mark XIV : 36 ) |

| | | |
|---|---|---|
| Latin | : | abba |
| English | : | abba = a title of honour |
| Brahuī ( Dravidian ) | : | babbā |
| Ostyak | : | ū- p |
| Abazinian | : | abbād |

**தந்தை**

ஈன்றானாகிய அப்பனைக் குறித்துத் தோன்றிய பல சொற்களில், இலக்கிய வழக்கில் அழுத்தமாகவும் அதிகமாகவும் பதிவெய்திய தகைமையைத் " தந்தை " என்னும் சொல்லே பெற்று நின்றுள்ளது. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முந்திய ஒரு காலவட்டத்தில் இத் தமிழக மண்ணில் இருந்தியங்கிய பண்டைய இலக்கியப் புலவர்கள் பலரும்- இலக்கிய வழக்குக்குப் பொருந்திய மரபுப் பயில்விலிருந்த இச் சொல்லைமட்டுமே சிறப்புறுமாறு பயன்படுத்தும் தொடர்ந்த வழக்கத்தை மேந்கொண்டு வந்துள்ளமை புலனாகின்றது.

இருமுது குரவருள் ஒருவனான தந்தை- அக் கால வழக்கிலுங்கூட " அப்பா " என்ற விளிப்பெயராலேயே அழைக்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்பதைச்- சொல்லமைப்பும்- மதிப்புரவுப் பின்னடையாக வழங்கிவரும் பாங்கும்- அதனின் இன்றைய பரவலான பயன்பாட்டு வழக்கும் நமக்குப் புலனாக்குகின்றன! இது, இன்றைய பரவலான பயில்விலுள்ள தாயைக் குறித்த சொல்லான " அம்மா " என்பதன் விளிப்பு மரபுத் தொடர்ச்சியை ஒத்ததேயாகும்!

பண்டைப் புலவர் யாவரும் தாம் இலக்கியம் படைக்கையில் தம் -மின் அறிவழுத்தப் புலமையுணர்வாலும்- இலக்கியத்துக்கேயுரிய மரபு நிலைக் கடைப்பிடிப்பாலும்- இவ்வகை உறவுமுறைப் பெயர்களில் சற்றே தரவுயர்த்தமுடையனவாக அவர்கள் கருதிய செவ்வியல் அமைப்புச் சார்ந்த சொற்களைமட்டுமே கையாளும் பழக்கமுடையவராகத் தொடர்ந்துள்ளமையை நன்கு உணர முடிகின்றது!

ஈராயிரம் மூவாயிரம் ஆண்டுகளுக்கும் முன்னர் அருஞ் சொற்கள் என்றவாறு பொருள் புலப்படுத்தவேண்டிய கட்டாயத்திலமைந்திருந்த

பல சொற்கள்- இன்றைக்கு மிக எளிமையுடையனவாக வழங்குதலையும் புரிவுறுதலையும் நாம் இங்கு எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

இலக்கியப் பயில்வாகப் பதிவுறாத சொற்களெல்லாம் பண்டையன அல்ல என்னும் ஆராய்ச்சிமுறை அறிவாண்மையுடையதன்று. வேர் நிலை விரிவுகள் கொண்டும்- வாய்பாடுகள் கொண்டும்- இனச் சொல் பரப்புகள் கொண்டும்- ஏரண முறை கொண்டும்- இசைவான நடுநிலை யுணர்வு கொண்டும் காணும் போதுதான் தமிழின் ஒண்மைகளும் உண்மைகளும் விளங்கித் தோன்றுவனவாயுள்ளன!

தா = தருகைக் கருத்து மூலவேர். “தனக்குக் கொடு” என்று பிறனொருவனிடம் உள்ள பொருளை ஒரு மாந்தன் கேட்டற்கு முதன் முதலில் பயன்படுத்திய மூலவேரொலி, இது!

வினைச்சொல்லென்றும்- பெயர்ச்சொல்லென்றும் விளக்கமுறாத மிகு முது தொடக்கக் காலத்திலேயே வழங்கிய தொடக்க வடிவங்களில் இச் சொல்லும் ஒன்று.

அன்னையானவள்- தன்னைப் பிறப்பித்தற்கு மூலகாரணனாகவும்- தன்னின் உருத்தோற்றத்திற்கு மூல வித்தை அவளுக்குத் தந்து நின்றவனாகவும் அப்பன் இருந்தமையுணர்ந்து- தருதல் கருத்து அடங்கிய “தா” என்னும் சொல்வழியாலேயே தந்தையை மாந்தன் சுட்டி விளித்துள்ளான்.

தா = தந்தை; தன்னைத் தந்தவன். தன்னைப் பிறப்பித்தவளை ஈன்றாள் என்றவாறும்- தா + ஆய் > தாஅய் > தாய் ( = தந்த ஆய் ) என்றவாறும் மாந்தன் சுட்டியமையும் ஈண்டுக் கருதத் தக்கன.

ஒ. நோ. : (1) தந்தவள் = தாய்

“தந்தவளைப் பணிந்தவளுந் 'தபோ வன' த்தினிடைச்
சார்ந்தாள்”

(சேதுபு. தேவிபுர : 7)

(2) தந்தவன் = தகப்பன்

(செ. ப. க. அ: பக்: 1745)

தா = தந்தை

தா + தா > தாதா > தாத்தா = தந்தைக்குத் தந்தை;
பாட்டன். ( இன்றும் பரவலான வழக்கு. )

[ " பாட்டன் " என்னும் சொல்- " பாடு " என்னும் பெருமைக் கருத்து அடிப்படையில் தந்தைக்கும்- தந்தையாகிய பெரியோனைச் சுட்டத் தோன்றிய பிந்தைய சொல்.

பாடு = பெருமை

(1) " கற்றா ரனைத்திலர் பாடு " ( குறள் : 409 )

(2) " தானை படைத் தகையால் பாடு பெறும் " ( குறள் : 768 )

பாடு + அன் > பாடன் > பாட்டன்
( ஒற்று இரட்டித்தது )

பாட்டன் = பெற்றோரின் தந்தை
" தந்தை தாயே பாட்டன் பாட்டி " ( பன்னிருபா : 179 )

பாட்டன் என்பது முன்னோான் என்றும் பொருள்படும் நிலையுண்மையைப் " பாட்டன் காணி " என்ற வழக்குச் சொல்லாலும் அறியவியல்கின்றது! இச் சொல்லுக்குள் முந்தையோன் ( பெரியோன் ) என்னும் கருத்து அடங்கியுள்ளமை கவனிக்கத் தக்கது. ) ]

" தா " என்னும் தனிச்சொல்- தந்தையைக் குறித்து வழங்கிய பண்டைய வழக்குண்மையைத் " தாத்தா " எனுமொரு சொல் இன்றும் நின்று விளக்குகின்றமை ஆழ்ந்து கவனிக்கத் தக்கது.

பண்டையில் இன்றைய நிலைபோலில்லாமல்- உறவு நிலையின் நெருக்கம் மிக மிக அழுத்தமாக இருந்தமையை மாந்தனூல் ( Anthropology ) சுட்டும். அப்படிப்பட்ட கூட்டுறவுநிலை அக்காலத்தே மாந்த இனத்துக்கு வாழ்வுத் தேவையாகவிருந்தது.

பண்பு வளர்ச்சியும் மனவளர்ச்சியும் அறிவு வளர்ச்சியும் படிப்படியாக வளர வளரத்- தன்னின் உடனுறவாக இருந்த உறவோரை

மட்டுமல்லாமல்- அண்டை அயலிலிருந்த மாந்த உறவினராகிய பிறரை யும் தம்மின் உறவுக்காரர்களை அழைக்கும் அவ்வப் பெயர்கள் கொண்டே சுட்டவும் விளிக்கவுமாக மாந்தன் தன்னிலையில் மேனிலைப் பண்பாட்டு வளர்ச்சி பெறத் தொடங்கினான். இவ்வகைப் பரிமாற்றத்தில்- தமிழ் மாந்த இனத்தின் உயிர்நேய உயர் வளர்ச்சியும்- பண்புப் பதப்பாட்டு வளர்ச்சியும் உள்ளடங்கியுள்ளமையைக் காணவியல்கின்றது.

அன்னன்னாருக்கு உரிய சிறப்பு உறவுப் பெயர்களைப் பொதுமைப் படுமாறு அண்டை அயலாகவிருந்த உறவோர்க்கும் வழங்கத் தலைப் பட்டுவிட்ட நிலையில்- சொந்தவுறவு நிலைத் தகைமையைத் தெளிவுப் படக் குறித்துக் காட்டற்கும் சுட்டற்கும் உரிய நிலையில்—

(1) ‘‘ யான் ’’ என்னும் தன்மைப் பெயரின் அடுத்த திரிபான ( யேன் ) > ஏன் என்பதன் வேற்றுமையடியாகத் தோன்றிய ‘‘ என் ’’ என்னும் சொல்—

(2) ‘‘ யாம் ’’ என்னும் தன்மை- பன்மைப் பெயரின் அடுத்த திரி பான (யேம்) > ஏம் என்பதன் வேற்றுமையடியாகத் தோன்றிய ‘‘எம்’’ என்னும் சொல்—

(3) ‘‘ நூம் ’’ என்னும் முன்னிலை- பன்மைப் பெயரின் வேற்றுமையடியாகிய ‘‘ நும் ’’ என்னும் சொல்—

(4) ஐம்பாற் சுட்டுப்பெயர்கள் தோன்றியபின்- தற் சுட்டுப் பெயர்களாக ( Reflexive Pronouns ) மாறிப் போன- ‘‘ தான் ’’ என் னும் ஒருமை குறித்த முற்காலப் படர்க்கைப் பெயரின் வேற்றுமையடி யாகிய ‘‘ தன் ’’ என்னும் சொல்—

— ‘‘ தாம் ’’ என்னும் பன்மை குறித்த முற்காலப் படர்க்கைப் பெயரின் வேற்றுமையடியாகிய ‘‘ தம் ’’ என்னும் சொல்—

என்றவாறுள்ள தன்மை- முன்னிலை- படர்க்கை ஆகிய மூவிடத் திற்கும் அவ்வதற்குமுரிய வேற்றுமையடிகளாக விளர்ந்த பகரப் பெயர் களை ( Personal Pronouns ) முற்பட்டு நிற்கும் நிலைமொழிகளாகக் கொண்டு அவ்வவ்வுறவு முறைப்பெயர்களை வருமொழியாக இம்ப ராக்கி நிறுத்திப் புணர்த்தியவாறு— தமிழர் தம் உறவுப் பெயர்ச் சொற்

களை ஆக்கமான தெளிவுநிலையில் செப்பப்படுத்தி வழங்கி வந்திருக் கின்றமை மிகச் சிறப்புக்குரிய செய்தியாகும்.

(1) தன்

முற்காலப் படர்க்கைச் சுட்டுப் பெயர் : தான்

படர்க்கைப் பெயரின் வேற்றுமையடி : தன்

ஐ = அண்ணன் ஐ + அன் > ஐயன் = அண்ணன்

ஐயன் + மார் > ஐயன்மார் = அண்ணன்மார்

" தந்தையொடு ஐயன்மா ரெல்லா மொருங்கு "
( கலி : 107 : 34 )

தன் + (ன்) + ஐ + மார் > தன்னைமார் = தன்னுடைய அண்ணன்மார்

[ காண்க : புறம் : 342 : 15 ; 345 : 12 ; 353 : 17. ஐந். ஐம் : 47 : 2 ; தி. மா: 32 : 1. ]

தன் + ஐயர் = தன் அண்ணன்மார்

[ காண்க : நற் : 127 : 5 ; குறுந் : 272 : 4 ; ஐங் : 365 : 1 ; அகம் : 393 : 8 ; புறம் : 337 : 16 ; 350 : 8 ; பழ : 338 : 2 ; கள : 26 ; 2 ; 28 : 2 ]

[ " நீன் " என்னும் முன்னிலைப் பெயரின் வேற்றுமையடி யாகத் தோன்றிய " நின் " என்னும் சொல்லொடு "ஐயர்" எனனும் மூத்தோரைக்குறித்த சொல்லும் உடன் பயின்று வந்த நிலையுண்மையும் இவ்விடத்தில் கருதத் தக்கது. ]

[ காண்க : சிலம்பு : 12 : 14 : 1; 7 : 17: 1;7 : 19 : 1 ]

தன் + ஐ ( தன் + (ன்) + ஐ ) > தன்னை = தன் தலைவன்

" தன்னை தலை மலைந்த........................ கண்ணி "
( பு. வெ : 1 : 13 )

ஆய் = தாய் ; பெரியோள் ; அக்கை

ஆய் > அய் > ஐ

தன் + ஐ ( தன் + ( ன் ) + ஐ > தன்னை = (1) தமக்கை ( திவா ) (2) ( தன் ) தாய் ( பிங். )

(1-2) தம்

முற்காலப் படர்க்கைச் சுட்டுப் பெயர் : தாம்

படர்க்கைப் பெயரின் வேற்றுமையடி : தம்

( இவற்றின் விளக்கம் இறுதியிலுள்ள எண் நான்கை (4) அடுத்த ( 1-2 ) என்னும் எண்ணின் கீழ்க் காண்க! )

(2) என்

தன்மைப் பெயர்- ஒருமை : ( யேன் ) > ஏன்

தன்மைப் பெயரின் வேற்றுமையடி : என்

என் + ஐ ( என் + ( ன் ) + ஐ ) > என்னை

என்னை : (1) என் தந்தை

"என் ஐக்குக் கலத்தொடு செல்வதோ" ( கலித் : 108 )

(2) என் தலைவன்

"நிறையொடு வருஉம் என்னைக்கு" ( புறம் : 262 : 5 )

என் + ( ன் ) + அன் > என்னன் = என்னவன்; எனக்கு உரியவன்

"என்னன் எவ்விடத்தன்" ( இரகு. யாக. 96 )

(3) எம்

தன்மைப் பெயர்- பன்மை : ( யோம் ) > ஏம்

தன்மைப் பெயர்- பன்மை- வேற்றுமையடி : எம்

எம் + அன்னை > எம்மன்னை

அன்னை > அனை = அன்னை (தொகுத்தல் திரிபு)

எம் + அனை > எம்மனை = எம் தாய்

" தீம்பாலூட்டும் எம்மனை வாராள் "

( பெருங். உஞ்சைக் : 33 )

எம் + பெருமான் > எம் பெருமான்

" எம் பெருமானே யெம்மை யொளித்தியோ "

( சீவக ; 294 )

எம் + அர் > எமர் = எம்மவர்

" எமர் எழு பிறப்பும் " ( திவ். திருவாய் : 2,7,1 )

எம் + அன் > எமன் = எம்மைச் சேர்ந்தவன்

( நன் : 275 உரை )

எம் + பின் > எம்பின் > எம்ன் = எமக்குப் பின்னவன்; எமக்குப் பின்னர்த் தோன்றிய இளைய உடன் பிறந்தான்.

( எம்பின்,- எம்பி என ஆயினமை கடைக்குறையால்- )

" எம்பியை ஈங்குப் பெற்றேன் " ( சீவக : 1760 )

(4) நும்

முன்னிலைப் பெயர்- பன்மை : நூம்

முன்னிலைப் பெயர்- பன்மை வேற்றுமையடி : நும்

நும் + ஐயன் > நுமையன் = நும் தமையன்; நும் அண்ணன்

" வில்வலாய் நுமையனார்ரைக் காண்டி "

( சீவக : 1709 )

நும் + அன் > நுமன் = நும்மைச் சார்ந்தவன்

( தொல். சொல். 410. இளம்பூ. உரை )

நும் + அர் > நுமர் = நும்மவர்
( குறி : 201 ; புறம் : 202 : 11 )

நும் + (ம்) + ஓன் > நும்மோன் = நும்மவன்
( அகம் : 398 : 7 )

நும் + முன் > நும்முன் = (1) நும் முன்னோன் ஆகிய தந்தை
" சுரும்பார் கண்ணிப் பெரும்பெயர் நும்முன் "
( புறம் : 174 : 18)

(2) முன் பிறந்தோனாகிய அண்ணன்.
( செ.ப.க. அ. பக்: 2322 )

நும் + பின் > நும்பின் > நும்பி = நும் தம்பி.
" நும்பி பின்வரு நும்பி "
( தணிகைப்பு : சீபரி : 397 )

( 1-2 -இல் குறிக்கப்பெற்ற " தம் " தொடர்பான குறிப்புகள் : )

தம் :

முற்காலப் படர்க்கைச் சுட்டுப் பெயர் : தாம்

படர்க்கைப் பெயரின் வேற்றுமையடி : தம்

தம் + ஆன் > தம் + (ம்) + ஆன் > தம்மான் = தம்மவன் ; தம் தலைவன்
" தம்மானை அறியாத சாதியா ருளரே "
( தேவா : 973 : 1 )

தம் + ஓன் > தம் +(ம்) + ஓன் > தம்மோன் = தம்மவன்; தம் தலைவன்
" தம்மோன் கொடுமை நம்வயி னேற்றி "
( நற் ; 88 )

தம் + அவன் > தம் + (ம்) + அவன் > தம்மவன் = தமக்கு உரியோன் ; தம்மின் உற்றான்.

தம் + அன் > தமன் = தம் உற்றான்.
" ஆழிப் படை யுடையான் தமன் "
( சூளா : அரசி ; 182 )

தம் + அள் > தமள் = தம் உற்றாள்
( நன் : 276 : உரை )

தம் + அர் > தமர் = (1) தம் சுற்றத்தார்.
" தமருட்டலையாதல் "
( பு. வெ : 3, 6 )

(2) தமக்கு வேண்டியோர்.
" தமர் தற்றப்பின் அது
நோன்றலும் "
( புறம் : 157 : 1 )

(3) தமக்குரிய சிறப்புடையோர்.
" தமரா வொழுகுதல் "
( குறள் : 444 : 1 )

தம் + முன் > தம்முன் = தமக்கு முன்னவனாகிய உடன் பிறந்தான் ; அண்ணன்.
" மருதி பொருட்டான் மடிந்தோன் தம்முன் "
( மணி : 22 : 147 )

தம் + பின் > தம்பின் > தம்பி = தமக்குப் பின்னவனாகிய உடன் பிறந்தான் ; இளைய உடன்பிறப்பாளன்
" மரவடியைத் தம்பிக்கு வான்பணையம்
வைத்துப் போய் "
( திவ். பெரியாழ் : 4 : 9 : 1 )

தம் + அக்கை > தமக்கை = அக்கையாள்
" நேசத்தொடு தமக்கையர் "
( பதினொா. திருநாவுக். திருவேகாதச : 1 )

தம் + அன்னை > தம்மன்னை = தம் தாய்.

( அன்னை > அனை = அன்னை ( தொகுத்தல்திரிபு)

( தம் + அனை > தம்மனை = தம் தாய்.

" தம்மனை தன்முன் வீழ்ந்துமெய் வைத்தலும் "

( மணி : 6 :131 )

தம் + ஐயன் > தமையன் = மூத்த உடன்பிறந்தான்; தம் அண்ணன்.

" தமையன் எம்மையன் " (திருவாச : 9, 13)

தம் + அப்பன் > தமப்பன் = தம் அப்பா

" தமப்பன்மார் கற்றாரிரைப் பின்பு போர்வர் "

( திவ். பெரியாழ் : 3, 1, 9 )

தா = அப்பா ; தன்னைத் தந்தவனாகிய அப்பன்.

ஒ. நோ: ஈன்றான் = தந்தை ( பிங் )

ஈன்றோன் = தந்தை ( சூடா )

தா + தா > தாதா > தாத்தா = அப்பனைப் பெற்றவனாகிய பாட்டன்.

தமிழிய மொழிகளில் இச் சொல்லின் படிவுகளாவன :

( DRAVIDIAN )

| | | |
|---|---|---|
| Malayalam | : tātan | = grand father |
| Kannada | : tāta | = grand father |
| Kodagu | : ta-te | = grand father |
| Tulu | : tā-te | = grand father |
| Telugu | : tāta | = grand father |
| Naiki ( Ch ) | : tāta | = grand father |
| Gondi ( S. ko ) | : tatal | = mother's father |

## INDO- ARYAN FAMILY

| | | |
|---|---|---|
| Dumaki | : dādo | = grand father |
| Bashkarik | : dād | = grand father |
| Kumauni | : dadā | = grand father |
| Bengali | : dādā | = grand father |
| Oriya | : dādā | = grand father |
| Maithili | : dādā | = grand father |
| Pahlvi | : dōdo | = father's father |
| Sindhi | : dādā | = father's father |
| Panjābi | : dāddā | = father's father |
| Hindi | : dādā | = father's father |
| Gujarāti | : dade | = father's father |
| Bhalesi dialect of West pahāri | : dādo | = father's father |

தம் + தா > தந்தா = தம்மை ஈன்ற அப்பன்.

தந்தா > தந்தை.

[ ஆகார ஈற்று விளிப் பெயர்கள் ஐ கா ர ஈற்றொடு நின்றமை இலக்கிய ஆக்கச் செப்பப்பாடுகளால் விளைந்த விளைவுகள்.

ஒ. நோ : அம்மா ( விளி ) > அம்மை ( பெயர் ) ]

**தந்தை**

(1) " தந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப "

( தொல். பொருள் : களவி ; 47 )

(2) " தந்தையும் தன்னையும் "

( தொல். பொருள் : செய் : 183:2 )

தந்தையர் = தந்தைமார்.

" தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதனால் "

( தொல். பொருள். கற்பி : 6 ; 23 )

தந்தை

தமிழிய மொழிகளில் ( Dravidian )

| | |
|---|---|
| Malayalam | : tanta = father |
| Kannada | : tande |
| Telugu | : tandri = father ( inscrpition ) tanri |
| Parji | : tend |
| Konda | : tanri |
| Kui | : tanji |
| Kuwi | : tanji |
| Badaga | : tande |

தந்தை + தந்தை > தந்தை தந்தை = தந்தைக்குத் தந்தை தந்தையைப் பெற்ற பாட்டன் ; தாத்தா.

" நுந்தை தந்தைக் கிவன்றந்தை தந்தை "
( புறம் : 290 : 3 )

ஒ. நோ : அப்பா + அப்பா > அப்பாப்பா > அப்பப்பா = தாத்தா

தம் + தா > தந்தா > தந்தை = தம் அப்பன்
[ இச் சொல் 96- இடங்களில் கழக இலக்கியங்களில் பதிவெய்தியுள்ளது ]

எம் + தா > எந்தா > எந்தை = எம் அப்பன்
[ இச் சொல் 56- இடங்களில் கழக இலக்கியங்களில் பதிவெய்தியுள்ளது ]

எந்தை = எம் அப்பன்.

" கடுந்திறல் எந்தையும் இல்லனாக "
( அகம் : 158 : 16-17 )

எந்தை = எம் தமையன்

" எந்தைக்குப் புகாவுய்த்துக் கொடுப்பதோ "
( கலி : 108 )

எந்தை = எம் தலைவன்

" எந்தையொடு கிடந்தாரெம் புன்றலைப் புதல்வர் "
( புறம் : 19 :13 )

நும் + தா > நுந்தா > நுந்தை = நும் அப்பன்.

[ இச்சொல் 31- இடங்களில் கழக இலக்கியங்களில் பதிவெய்தியுள்ளது. ]

" நுந்தை நும்மூர் வருகுதும் " ( ஐங் : 92 )

தா + தா > தாதா = ( 1. தந்தைக்குத் தந்தை )
( 2. தந்தை )

[ தாய் + அம்மை > தாயம்மை- [ அம்மை + அன்னாய் > அம்மான்னாய் > அம்மானாய் > ] அம்மானை- என்பன போன்று- ஒரு பெயர் பற்றிய இரு சொற்களை உயர்வுப் பன்மையாக அடுக்கிச் சொல் லும் மரபுப்படியே " தா " என்னும் தந்தைக்குரிய பெயர் இருமுறை அடுக்குற்றுத் " தாதா " (விளி) என்றாகித் ( தாதா > ) தாதை எனத் தந்தையையே குறித்து நின்றது.

தா + தா > தாதா > தாதை = தந்தை

(1) " இருவர் தாதை இலங்குபூண் மா அல் "
( பரி : 1 : 31 )

(2) " தாதையும் நீயென மொழியுமால் "
( பரி : 3 : 13-14 )

(3) " அலர்ந்த புகழோன் தாதை யாகலின் "
( பரி : 4 : 14 )

(4) " தாதை ஏவலின் மாதுடன் போகி "
( சிலம்பு : 14 : 46 )

(5) " இம் மடந்தை தன் கணவன் தாதையைக் கேட்கில் "
( சிலம்பு : 15 : 126 )

(6) " கோவலன் தாதை கொடுந்துய ரெய்தி "
( சிலம்பு : 27 : 90 )

(7) " கண்ணகி தாதை " ( சிலம்பு : 27 : 98 )

(8) " நின் தாதையும் தாயும் " ( மணி : 28 : 93 )
[ மேலுங் காண்க : மணி : 3 : 55; 22 : 79; 26 : 3 28 : 73; 28 : 123 ]

தமிழிய மொழிகளில் ( Dravidian )

| | | |
|---|---|---|
| Kannada | : | tāta = father |
| Telugu | : | tāta = father |
| Parji | : | tāta = father |

வடமொழியுள் : ( Sanskrit )

| | | |
|---|---|---|
| Sanskrit | : | tāta = father |

Sinitic Languages

TAI- CHINESE GROUP

| | | |
|---|---|---|
| Gyami | : | dadà |

INDO- EUROPEAN FAMILY

ARYAN SUB- FAMILY

| | | |
|---|---|---|
| Wachi | : | tat, tàt |
| Signi | : | dād |
| Sarikoli | : | tà |
| Iskāsmi zēbaki | : | tāt, tàt, ta |
| Munjāni ( or ) Mungī | : | tāt |
| Yudgā | : | tat |

## DARDIC (OR) PISĀCHA BRANCH

| | | |
|---|---|---|
| Baśgali | : | tōt |
| Wai- alā | : | tata |
| Kalasa | : | dāda |
| Pasai, Eastern Western | : | tāti |
| Kowār (or) Chitrāli | : | tat |
| Gypsy- European | : | dād |

## INDO- ARYAN BRANCH

| | | |
|---|---|---|
| Sanskrit | : | tātah, dādda |
| Prakrit | : | tāō |
| Sinhalese | : | tāltā |
| Chattīsgarī | : | dadā |
| Bagēli | : | dādā |
| Braj | : | bākā = dāū |
| Nimādī | : | dādā, dādō |
| Bīli | : | dādō |
| German dialect of European Gypsy | : | dād |
| Dameli | : | dādi |
| Gulbahāri dialect of Pashai | : | dādā |
| English | : | dada; dadda; da- da = a child's word for father<br>dad = ( colloq. ) father<br>[ of the actual origin, We have no evidence. ]- என்னும் குறிப்பு மிக மிகக் கவனிக்கத்தக்கது.<br>( காண்க : பக் : 638. Vol. I Compact edition of the Oxford English Dictionary ) |

daddy : a childish or familiar word for father.
[ a diminutive and endearing form of dad = father ]

| | | |
|---|---|---|
| East-priesian | : | tatte = father |
| Welsh | : | tad = father |
| Greek | : | tata = father [ used by youths to their elders ] |

**மயக்கத்தாலாகிய சில பிழைபாட்டுச் சொல்லாக்கங்கள் பற்றிய ஒரு குறுங்குறிப்பு :**

பண்டை மூவிடப் பகரப் பெயர்களின் ( Personal Pronouns ) வேற்றுமையடிகளொடு முற்றுந் தொடர்பற்ற- பிற கருத்துகளினடிப் படையில் இயல்பாகத் தோன்றிய சில சொற்களையும்— தோற்ற அமைப்பிலும் ஒலியமைப்பிலும் அவை ஒப்புமையாயிருப்பது மட்டுங் கருதி— மயங்கியவாறு- அன்ன சொற்களுக்கு நேரியவாகச் சில தவறான சொற்களையும் பண்டையில் உருவாக்கியுள்ள பிழைபாடுகள் ஈண்டுக் கருதற்பாலன.

அவ்வகையில் உள்ள இயல்புச் சொற்களுள் "தங்கை" என்பதுவும் " தவ்வை " என்பதுவும் தலையாயன்வாம்.

இளையாளாகப் பின்னர்ப் பிறந்தவளாகிய- உடன்பிறந்தாளைச் சுட்டும் "தங்கை" என்னும் முறைப் பெயர்ச்சொல்- "தங்கு" என்னும் கீழிருத்தல் வினையின் கருத்து அடிப்படையில் தங்கு + ஐ > தங்கை என்றாகி வளர்ந்து நின்றுள்ளமையை ஆழ்ந்து ஓர்ந்து பாராமல்- தம் + கை > தங்கை என்றவாறே ஆகியிருக்கவேண்டும் என்று மற்றுள்ள பெரும்பான்மைச் சொல்லமைவுகளை ஒப்ப நோக்கியவாறு தங்கைக்கு நேர்ப்படுமாறு " யாம் " என்னும் தன்மை- பன்மைப் பெயரின் அடுத்த திரிபான ( யேம் ) > ஏம் என்பதன் வேற்றுமையடியான " எம் " என்பது கொண்டு எம் + கை > எங்கை என்றவாறும் — " நூம் " என்னும் முன்னிலை பன்மைப் பெயரின் வேற்றுமையடியான " நும் " என்பது கொண்டு நும் + கை > நுங்கை என்றவாறும் இரு

புதிய சொற்புனைவுகள் செய்துள்ளமை பண்டைப்புலவர் சில்லோரின் அறியாமைப் போக்காலேற்பட்டுவிட்ட ஆக்கங்களாகும் !

*காண்க : எங்கை = எம் தங்கை.*

(1) " எங்கையர்க்கு உரை என இரத்தற் கண்ணும் "
( தொல். பொருள். கற்பு : 6 : 16 )

(2) " காதல் எங்கையர் காணின் நன்று "
( தொல். பொருள். கற்பு : 6 : 30 )

நுங்கை = நும் தங்கை.
" நுங்கை ஆகுவென் நினக்கென "
( அகம் : 286 : 12 )

**தங்கை :**

(1) " நோன் பகட்டுழவர் தங்கை "
( சிறுபாண் : 190 )

(2) " வானிணப் புகவிற் கானவர் தங்கை "
( அகம் : 132 :6 )

(3) " வல்விற் கானவர் தங்கை " ( குறுந் : 335 : 6 )

(4) " துளரெறி நுண்டுகட் களைஞர் தங்கை "
(குறுந் : 396 : 5)

தங்கை

தங்கை + ஆள் > தங்கையாள்
தங்கையாள் > தங்காள் = தங்கை
ஒ. நோ : " நல்ல தங்காள் "

தங்கை + அத்தி > தங்கையத்தி > தங்கத்தி ( துளு )
தங்கை + அச்சி > தங்கையச்சி > தங்கச்சி (உலக வழக்கு)
தங்கு + இ > தங்கி ( கன்னடம் ; கூய் )

தங்கை : தங்கை : ( கோண்டி )
தங்கெ : ( குடகு )

[ மேற்பட்ட விளக்கங்களுக்கு எம்மின் " தகுதி " என்னும் மொழியாய்வுக் கட்டுரை நூல்- ( பக் : 71 ) காண்க. 1979 ]

[ " தங்கை " எனுஞ் சொல்லின் வேர்ப்பொருளுணராமையால்- எங்கை எனும் வடிவத்தையும் நுங்கை எனும் வடிவத்தையும் தவறுதலாக வடிவமைத்துள்ளனர் ! ]

இம் முச்சொற்களையும் கண்ட பிங்கலமுனிவர் -" கை " என்பதற்கே தங்கை எனத் தம் சொற்றொகையுள் புதுப்படப் புகுத்தி நிறுத்தினார். [ கை = தங்கை ( பிங் ) ]

**பின் :**

" பின் என்னும் கீழிருப்புக்கான இடக் கருத்தின் அடிப்படையில்- பின் தங்கிப் பிறந்தோராகிய உறவுமுறையோரைச் சுட்டும் சொற்களை உற்று நோக்கியுணரின்- இத் தங்கையின் தங்கிப் பிறந்த நிலையுண்மையைத் தெளியலாம்.

[முதற் குறிப்பு:] பின்: (1) பின்பக்கம் (2) இடம் ( பிங். )
(3) கடை (பிங்.)
(4) பிந்தின காலம்
( செ. ப. க. அ. பக் : 2723 )
(5) பிறகு ( செ. ப. க. அ. பக் : 2723 )

பின் = தம்பி ( திவா. )
பின்னர் = (1) பின் தொடர்ந்து வருவோர்
" களி மகன் பின்னரும் "
( மணி : 3 : 103 )
(2) பிற்பட்டவன்
" மறைமுது முதல்வன் பின்னர் மேய "
( சிலம்பு. வேட் )
(3) தம்பி (மதுரைக் : 40 : உரை )

பின்னர் = பிற்பட்டவர் ( செ. ப. க. அ. பக் : 2727 )

பின்னவன் = தம்பி

" பின்னவன் பெற்ற செல்வம்
அடியனேன் பெற்ற தன்றோ "
( கம்பரா. கைகேசி : 110 )

பின்னன் = தம்பி

" பின்னனை நட்பொடு மற்றவர் காணும் "
( இரகு. அவதாரநீங் : 13 )

பின்னோன் = தம்பி

" பின்னோன் களத்தி லாரமிட் டணிந்தனன் "
( உபதேசிகா. சிவ. விரத : 360 )

பின்-பிறந்தான் = தம்பி

" எம் பெருமான் பின்பிறந்தா
ரிழைப்பரோ பிழைப்பென்றான் " ( கம்பரா. குகப் : 30 )

பின் + அன்னை > பின்னன்னை

[ அன்னை > அனை = அன்னை (தொகுத்தல்திரிபு) ]

பின் + அனை > பின்னனை = அன்னைக்குப் பின்னவளாகிய செவிலித்தாய் (பிங். )

பின் + அவள் > பின் + (ன்) + அவள் > பின்னவள் = தங்கை ( செ. ப. க. அ. பக் : 2727 )

பின்- பிறந்தாள் = தங்கை ( செ. ப. க. அ. பக். : 2724 )

பின் + (ன்) + இ > பின்னி = தங்கை

" வசிட்ட முனி கற்பார்தரு பின்னியை "
( கோயிற்பு. வியாக் : 23 )

பின் + (ன்) + ஐ > பின்னை = தங்கை

" உலக மூன்றுங் காவலோன் பின்னை "
( கம்பரா. சூர்ப்ப : 29 )

[ ஒ. நோ : நல் > ந.

ந + (ப்) + பின்னை > நப்பின்னை. ]

" பெய்வளைக் கையாள் நம் பின்னை "

( சிலம்பு : 17 : பக் : 144 )

( பின்னை = நப்பின்னை )

" தங்கை " வழியே உருப்பெற்றுவிட்ட ஒருபோகுச் சொற்களான போன்மையமைப்புச் சொற்களைக் ( இவ் வெங்கையையும் நுங்கையையும்- ) " கடிசொல் இல்லை, காலத்துப் படினே " ( தொல். சொல் : 9 : 56 ) என்னும் வழமையேற்புச் சட்டத்தின்படி இக்கால் கொண்டு பயன்படுத்துவதில் ஒன்றும் ஊறுபாடின்று !

இவ் வகைமை போன்றே- தா + ஆய் > தாஅய் > தாய் என்ற முறைப்போங்கில் முளைத்த தா + அவ்வை > தாவ்வை > தவ்வை என்னும் தாயைச் சிறக்கக் குறிக்க எழுந்த சொல்— அவ்வை என்னும் சொல்லுக்கு மூத்தோள் பொருளும் வழக்குக்கு வந்து நின்ற நிலையால் மூத்த அக்கையாளையுஞ் சுட்டி நின்று— முன்னர்க் கூறிய தங்கை வழி நேர்ந்துவிட்ட தவற்றுச் சொற்புனைவாக்க அமைப்படிப்படையிலேயே— " எவ்வை " ( = எம் அக்கை ) என்றவாறும், "நுவ்வை " ( = நும் அக்கை ) என்றவாறும் புதுப்புனைவுகள் உருப் பெறுவனவாயின.

எவ்வை = எம் அக்கை.

" எவ்வைக்கு எவன் பெரிதளிக்குமென்ப "

( ஐங்குறு : 89 )

நுவ்வை = நும் அக்கை.

" நும்மினுஞ் சிறந்தது நுவ்வையாகும் "

( நற் : 172 )

பிந்தை இலக்கணியர் முந்தைச் சொல்லான தவ்வையின் தோற்றத் தகைமையுண்மையை உணராராய்த்— தம் + அவ்வை > " தவ்வை " என்றாகியது என்றவாறு பொருந்தாப் புணர்ச்சியைக் கற்பித்து அதனையே உடன்பாடாக்கிக் கொண்டு— " எவ்வை " என்பதற்கு "எம்+அவ்வை" என்றவாறும், நுவ்வை என்பதற்கு "நும்+அவ்வை" என்றவாறும் சந்திப் பிரிப்பு நிகழ்த்திப் புத்திலக்கணம் புதுக்கி நிற்பாராயினர்!

[ இம் மேற்குறித்த வகை நேர்ச்சிக்கு- உறவு நிலையில் தெளிவுப் பாடு சுட்டுவதற்கென மூவிடப் பகரப் பெயர்களை முன்னிறுத்தி உரு வாக்கப்படுத்தினவான- தந்தை எந்தை நுந்தை- தம்முன் எம்முன் நும் முன்- தம்பி எம்பி நும்பி- தன்னை என்னை- தமையன் நுமையன்- தம்மனை நும்மனை போலும் சொற்களின் பெருக்கத்தாக்கமே காரணம் என்றறிதல் வேண்டும் ! ]

**அத்தன் :**

" உ " : முன்மைச் சுட்டு

உ + (வ்) + அன் > உவன்

உ + (வ்) + அள் > உவள்

உ + (வ்) + அர் > உவர்— என்றவாறு முன் நின்றாரைச் சுட்டி எழுந்த பாலறி வந்த உயர்திணைப் பெயர்களும் (தொல். சொல் : 164) உ+(அது) து > உது என்றவாறு முன்னின்ற அஃறிணைப் பொருளை அல்லது உயிர்ப்பொருளைச் சுட்டியெழுந்த பாலறிவந்த அஃறிணைப் பெயரும் ( தொல். சொல் : 168 ) கடைக் கழகக் கால அளவிலேயே படிப் படியே மறையத் தொடங்கின. எனினும்- முன்னிலையானிடம் உள்ள ஒரு பொருளை " உது என்ன ? "- என்று கேட்கும் வழக்கு இன்னும் யாழ்ப்பாணத் தமிழர்களிடம் வழக்கிலுள்ளமை பண்டைப் பரவலான வழக்குகளின் பொது ஒதமே !

" உ " : முன்மைச் சுட்டு. இம் முன்மைச் சுட்டே மேன்மைச் சுட்டாகி உயர்ச்சியுஞ் சுட்டியது.

உ + ( ப் ) + பக்கம் > உப்பக்கம்.

" ஊழையும் உப்பக்கம் காண்பர் " ( குறள்: 320 : 1 )

உ > உய் = மேற்செல் ; தப்பித்துக்கொள்

உய் + அர் = உயர் = மேற்செல்

உய் + கு > உய்கு > உகு

உகு + அப்பு ( ஓரீறு ) > உகப்பு = உயர்ச்சி
" உகப்பே உயர்தல் " ( தொல். சொல். உரி : 8 )

உய் + ( ச் ) + சு > ( உய்ச்சு ) > உச்சு = உயரம்
உச்சு + இ > உச்சி = உயரம்; முனை; நுனை

உச்சு + அம் > உச்சம் = மிகவுயரம்

உ : ( மேல் )
உ + ( வ் ) + அண் > உவண் = மேலிடம் ( சீவக : 2853 )
உவண் + அம் > உவணம் = உயர்ச்சி ( திவா. )
உவ + (ப்) + பு > உவப்பு = உயரம் ( பிங். )
உ + து > உது
உது + இ > உதி = தோன்று; எழு; மேற்படு
" உதிப்பதுமீறுமுண்டு " ( சி. சி : 1, 2 )
உதி + ( த் ) + தல் > உதித்தல் = பிறத்தல் ( வின்சிலோ )
உதி + ( ப் ) + பு > உதிப்பு = தோற்றம்
" மரிப்பொடு உதிப்பு " ( பிரபுலிங். முத்தாயி. 23 )
உது + ஐ > உதை = மேல்நோக்கி எற்று; காலால் ( ஒன்று- ) மேலெழுமாறு எற்று.

(1) " கடுங்கால் யானை..................முடங்குதாள் உதைத்த பொலங்கெழு பூழி " ( அகம் : 63 : 4-5 )

(2) " அத்தம் நடுகல் ஆளெள உதைத்த கான யானை " ( அகம் : 365 : 4-5 )

உது > உந்து [ ஒ. நோ : முது > முந்து
சிது > சிந்து]
உந்து + அல் > உந்தல் = உயர்ச்சி ( வின்சிலோ )
உந்து + தல் > உந்துதல் = (1) எழும்புதல்
" உந்துநீர்க் கங்கை "
(கூர்மபு. இராமனவ: 39)

(2) அம்பு முதலியன மேற் செலுத்துதல்

" சரங்கள்.............வீமன் உந்த "

( பாரத. புட்ப. 104 )

உது > உத்து

உத்து + இ > உத்தி = (1) "தலைக்கோலம்" என்னும் அணி வகை

( கலி: 96 : 13; 97 : 14 )

(2) நெற்றியின் உச்சியில் அணியப் பெறுவதாகிய "நெற்றிச் சுட்டி" என்னும் அணி வகை.

( அகம் : 400 : 5 )

(3) நெற்றிச்சுட்டி போன்று நாகத்தின் படத்தில் தோன்றும் கோலம்; படப்பொறி.

"ஒளிதிகழ் உத்தி உருகெழு நாகம்"

( பரி : 12 : 4 )

[ மே.கா: புறம்: 382 : 12-14; அகம் : 202 : 10 ]

உத்து + அரம் ( ஓரீறு ) = உத்தரம் = மேல்

உத்தரம் = மேற்பட்டது

" அதுக்குத்தரமல்லதை "

( உத்தரரா. திருவோலக் : 4 )

**உத்தரம் :**

உயர்ந்திருக்கும் திசையாகிய வடதிசை. ( இக்கருத்து இமைய மலையின் இருப்புக் காரணமாகத் தோன்றியுள்ளதாகத் தெரிகின்றது. )

உத்தரம் = வடக்கு ( திவா. )

[ தக்கு = தாழ்வு. தக்கு என்னும் தாழ்வுப் பொருட் கருத்துச் சொல்லினின்று- தக்கு + அணம் > " தக்கணம் " எனத் தென்றிசை குறிக்கப் பெறுதல் ஒப்பு நோக்கத் தக்கது. ]

[ ஒ. நோ : உது + அக்கு > உதக்கு = வடக்கு ( திவா. )

உத்தரம் = வடநாடு

"ஓங்குநீர் வேலி யுத்தர மரீஇ" ( சிலம்பு : 26 : 179 )

உத்தரம் : விட்டம் ( நெடுநல் : 82. உரை. )

உத்தரம் + பலகை > உத்தரப்பலகை = தூணத்துக்கு மீது வைத்த மேற்பலகை.

" உத்தரப் பலகையோ டரங்கின் பலகை "
( சிலம்பு : 3 : 103 )

[ மே. கா : சுத்தானந்தப் பிரகாசிகை. உ. வே. சா. அடிக்குறிப்பு ]

உது + அண் > உதண் = கூரிய உச்சியைஉடைய மொட்டம்பு.
" யானை யுதணாற் கடிந்தான் " ( திணைமா : 2 )

உதண் + அம் > உதணம் = மொட்டம்பு
" புகலும் வடிக்கணை யுதணமெடுத்தன "
( பாரத. கிருட். 204 )

உது + அள் > உதள் = ஆட்டுக் கடா.

[ மேற்பொதிந்த வலிய தோலையுடையது என்னும் பொருட் காரணத்தின் வழி " ஆடு " — உதள் என்னப்பெற்றது. ]

உதள் = ஆடு ( திவா. )

ஒ. நோ : உதள் > அதள் ( உகர அகரத் திரிபு )

அதள் = தோல்

"அதளோன் றுஞ்சுங் காப்பின்" (பெரும்பாண் : 151)

அதள் = மரப்பட்டை

"வேங்கை அதள்" ( தைலவ. )

உது + இ > உதி = உயர்ந்து வளரும் தன்மையுடைய மர வகையுளொன்று.

(1) "உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே" ( தொல். எழுத் : 7 : 41 )

(2) "உதிமர இயற்றே" ( தொல். எழுத் : 7 : 60 )

உதி > ஒதி = உதி மரம். ( Indian ash tree ) ( Odina Wodier. )

உதி = உதிய மரம் ( சி. வை. அ. )

உதி + அன் > உதியன் = உதிய மரம். ( F. T. C. )

உது + இ > உதி = தோன்று; மேலெழு.

உதி + அன் > உதியன் = மிக்கோன், தோன்றல்; அண்ணல்; சிறந்தோன்.

[ "தோன்று" என்னும் வினைச் சொல்லின் அடியாகத் தோன்றிய தோன்று + அல் > தோன்றல் என்னும் சொல்லே சிறந்தோனைக் குறித்துந் தோன்றி நின்றமை- இவ்விடத்தில் ஒப்பிட்டுக் கருத வேண்டிய ஒன்றாகும். ]

தோன்றல் :

(1) "புலவரை யிறந்த புகழ்சால் தோன்றல்" ( புறம் :21:1 )

(2) "கடுமான் கைவண் தோன்றல்" ( புறம் : 43 : 11-12 )

(3) '' துன்னருந் துப்பின் வயமான் தோன்றல் ''
( புறம் : 44 : 10 )

உயர்ச்சிக் கருத்தின் வழி - பெருமை- தலைமை முதலிய கருத்துகளுக்கு விளர்ந்த அண்ணல் என்னும் சொல்- அரசனையும்- பெருமையிற் சிறந்தோனையும் குறித்து வளர்ந்து நின்றமையும் இவ்விடத்தில் கருதத் தக்கதாகும்.

அண்ணல் : (1) பெருமை ( பிங். )
(2) தலைமை ( திருக்கோ : 256 )
(3) அரசன் ( சூடா. )
(4) பெருமையிற் சிறந்தோன் ( பிங். )

அண்ணல் = தலைவன்

காண்க : '' அடுபோரண்ணல் '' ( புறம் : 42:1; 67:2)
'' அண்ணல் எங்கோமான் ''
( புறம் : 95 : 9 )
'' ஆனெழிலண்ணல் '' ( கலி : 9 : 10 ) ]

உதியன் :
[ சேர மரபினைச் சார்ந்த மன்னன் ஒருவனின் பெயர்; நன்னன் உதியன் என்ற பெயரில் விளங்கிய சேர மன்னன் ]

உதியன் = உதியஞ் சேரல்
'' உதியன் மண்டிய ஒலிதலை ஞாட்பின் ''
( நற் : 113 : 9 )

உதியன் + சேரல் > உதியஞ் சேரல் = இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின் தந்தை பெயர்.

உது > ( அது ) > அதி = மிகை
( உகர அகரத் திரிபு. )

ஒ. நோ : உகை > அகை
உணங்கு > அணங்கு
உரை > அரை
( உப்பம் ) > அப்பம்
( உரு ) > ( உரும்பு )> அரும்பு
உவித்தல் > அவித்தல்
முடங்கு > மடங்கு முயங்கு > மயங்கு
துளி > தளி குடை > கடை

அதி + அம் > அதியம் > அதிகம்
ஒ. நோ : வணியன் > வணிகன்

அதிகம் = மிகுதி ( திவா. )
உயர்ந்தது ( திருவிளை. தலவி. 3 )

அதி = மிகுதிப் பொருள்தரும் ஓர் இடைச்சொல்
" அதி நுட்பம் யாவுள முன்னிற்பவை "
( குறள் : 636 ; 1 )

அதி + அன் > அதியன் = மிக்கோன்; சிறந்தோன்;
= அதியன் என்னும் அரசன்
" அள்ளனைப் பணித்த அதியன் " ( அகம் : 328:8 )

அதியன் + மான் > அதியமான்
( மகன் > மான் ) ( தொகுத்தல் திரிபு. )
" அதியமான் பரிசில் பெறூஉங் காலம் "
( புறம் : 101 : 5 )

[ அதியர் குடியிற் பிறந்து சிறந்தவன். இவனின் முழுப் பெயர் அதியமான் நெடுமான் அஞ்சி என்று அறிஞர் கூறுவர். சேரமரபினன். இக்கால் தருமபுரியாக உள்ள- அக்காலத் தகடூரைத் தலை நகராகக் கொண்டு ஆண்ட குறுநில மன்னன். ]

அதியர்கோமான் = (1) அதியமான் நெடுமான் அஞ்சி

" ஆர்கலி நறவின் அதியர் கோமான் "
( புறம் : 91 : 3 )

(2) அதியமான் பொகுட்டெழினி
" மதியேர் வெண்குடை அதியர் கோமான் "
( புறம் : 392 : 1 )

அதியன் > அதிகன் = (1) அதியமான் நெடுமான் அஞ்சி
" நெல்லி யமிழ்து விளை தீங்கனி
ஔவைக்கு ஈந்த..........அதிகனும் "
( சிறுபாண் : 100-104 )

(2) பசும்பூண் பாண்டியன் என்பானின் திறமிக்க தண்டத் தலைவருள் ஒருவனின் பெயர்.
" பசும்பூண் பாண்டியன் வினைவல் அதிகன் "
( குறுந் : 393 : 4 )

" நசை பிழைப்பறியாக் கழறொடி அதிகன் "
( அகம் : 162 : 18 )

அதிகன் + மான் > அதிகமான் = அதியமான் நெடுமான் அஞ்சி
( பதிற். பதி : 8-4 )

அதிகன் = மேற்பட்டவன்
" பகைஞர்க்கெல்லாம் அதிகனாய் "
( பிரபோத : 26 : 110 )

அதிகர் = பெரியோர்
" அதிகருக் கமுத மேந்தல் " ( சூடா : 21 : 99 )

அது + அன் > அதன் = பெரியோன்; மூத்தோன்; தலைவன்.
அதன் + கோடு > அதன்கோடு > அதங்கோடு
" அதங்கோட் டாசாற் கரில்தபத் தெரிந்து "
( தொல். சிறப்பு. 1 : 11 )

திரு + அதங்கோடு > திருவதங்கோடு > திருவிதங்கோடு > திருவாங்கூர் ( திருவாங்கூர் > (English) Travancore )

அதன் > ஆதன் = பெரியோன்; மூத்தோன்; தலைவன்

[ பண்டைக் கால மக்களியற் பெயர் வகையுளொன்றாகப் பேராட்சி செலுத்திய சொல். உயரியோன்- ( மூத்தோன் ) என்பதுவே இதற்குரிய கருப் பொருள். ]

'' ஆதனும் பூதனும் கூறிய இயல்பொடு ''
( தொல். எழுத் : 8 : 53 )

இச் சொல்லாட்சியின் பண்டைப் பரப்பு உண்மையைக் கீழ்க் குறித்துள்ள பெயர்களால் தெளிய விளங்கலாம்!

ஆதன் =

செல்வக் கடுங்கோ வாழியாதன் ( பதிற் : 67 : 23
பதிற் : 7. பதி : 12
புறம் : 8 : 5; 387 : 30 )

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன்
( புறம் : 62, 368
பதிற் : 6. பதி : 1; புறம் : 63
பதிற் : 5. பதி : 2 )

சேரமான் பெருஞ்சேரலாதன் ( புறம் : 65 )

ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் ( பதிற் : 51 : 60 )

சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன்
( அகம் : 65 : 5; 233 : 8.
புறம் : 2 )

சேரலாதன் ( அகம் : 55 : 11; 127 : 3 )

ஆதன் ஓரி ( புறம் : 153 : 4 )

ஆதன் அழிசி ( புறம் : 71 : 13 )

ஆதன் எழினி (அகம் : 216 : 14)
ஆதன் உங்கன் (புறம் : 389 : 13)
வாட்டாற்று எழினியாதன் (புறம் : 396 : 13)
ஓய்மான் வில்லியாதன் (புறம் : 376; 379 ; 7)
நெடுவேள் ஆதன் (புறம் : 338 : 4)

அது > அத்து > அத்து + இ > அத்தி = (பெரியோன் - (சிறந்தோன்) என்று பொருள்படும் பண்டை ஆண்பாற் பெயர் - )

(1) பழைய தமிழரசன் ஒருவனின் பெயர்
"நன்னன் ஏற்றை நறும்பூண் அத்தி"
(அகம் : 44 : 7)

(2) ஆடுகள மகன் அத்தி
(2-1) "ஆட்டன் அத்தி நலனயந்து"
(அகம் : 222 : 7)
(2-2) "ஆட்டன் அத்தியைக் காணீரோ வென"
(அகம் : 236 : 16)

அத்து + அன் > அத்தன் = பெரியோன்
ஒ. நோ : அத்தன் = மூத்தோன் (திவா.)
அத்தன் = உயர்ந்தோன்
"அத்தரின் அரும் பொருள்"
(திருவிளை : மெய்க்காட் : 34)

அத்தன் = குரு
"அத்தனே யடுவ லாண்மை"
(பாரத. பதினைந் : 27)

அத்தன் = அப்பன்; தந்தை

(1) "அவர் நமக்கு அன்னையும் அத்தனும் அல்லரோ"
(குறுந்: 93 : 2-3)

(2) " அன்னையும் அத்தனும் " ( கலித் : 115 : 8 )

(3) " என்னத்தனை வென்றிசை கொண்டிலனோ "
( கந்தபு. உற்பத். காமதக : 10 )

மதிப்புரவுப் பின்னடையாக ( Honorary suffix ) தந்தைக்குரிய பெயர்களையும் தாய்க்குரிய பெயர்களையும்- இயற்பெயரோடு சேர்த்து வழங்கும் வழக்கம் மிகு பண்டைப் பயில்வுடையதாகும். இன்றும் இந் நிலை அறாவழக்குடைமையை கண்ணையன் கண்ணப்பன் முருகையன் முருகப்பன் செல்லையன் செல்லப்பன் பொன்னையன் பொன்னப்பன் நல்லையன் நல்லப்பன் வீரையன் வீரப்பன் என்றவாறு ஆண்பால் இயற் பெயர்களொடும் — கண்ணம்மா செல்லம்மா செல்லாயி பொன்னம்மா பொன்னாயி வீரம்மா வீராயி என்றவாறு பெண்பால் இயற்பெயர் களொடும் தந்தை தாய்க்குரிய இணை பெயர்களைப் பின் பிணைத்து வழங்குதலால் அறியலாம்.

— இந் நிலையைத் தந்தையைக் குறித்த " அத்தன் " என்னும் சொல்லும் பெற்றிருந்த பேற்றினைக் கழகப் புலவர்களிற் பலர்— மதுரைக் கண்ணத்தனார், மதுரைக் கவுணியன் பூதத்தனார், மதுரைக் காமக்கணி நப்பாலத்தனார், மாறோக்கத்துக் காமக்கணி நப்பாலத்தனார், நப்பாலத்தனார், அதியன் விண்ணத்தனார்- ஆர்காடு கிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார், குடவாயிற் கீரத்தனார் என்றவாறு முந் தையிற் பெயர் பெற்றியங்கியமையாற் பெறப்படும்.

அத்தன் = தந்தை

அத்தா = ( விளி ) அப்பா

அத்தா + அத்தா > அத்தாத்தா > அத்தத்தா = அப்பா அப்பா!

(1) " காமரு நோக்கினை அத்தத்தா என்னுநின் தேமொழி கேட்டல் இனிது " ( கலி: 80 : 14 : 15 )

[ நச். உரை : விருப்பம் மருவுகின்ற அழகினையுடையையாய் அத்தா- அத்தா என்று கூறும் நினது இனிய மொழியைக் கேட்டு மகிழ்ந்திருத்தல் இனிது ! " ]

(2) " ஓவா தடுத்தடுத்து அத்தத்தா வென் பாண் "
(கலி : 81 : 19)

[ நச். உரை : " ...... எதிராக நின்ற தலைவனைக் கண்டு பிள்ளை- " அத்தா—அத்தா! " - எனவும் ...... " ]

அத்தன் > அத்தா ( விளி )

தமிழிய மொழியில் ( Dravidian )

Malayalam : attan = father

பிற அயன் மொழிகளில்

Agglutinative Non-Indian Languages

Basque : aita

TIBETO-BURMAN LANGUAGE

Lolo- Moso- Group

Aka ( ka ) : àdà

TIBETAN GROUP

Balti : a-tā
of Purik : a-tā

INDO- EUROPEAN- ARYAN- SUB- FAMILY

Sarikoli : atà
Bili : ātö

Turkish : ata = father
Hungarian : atya = father
Finnish : ätta = father
Chermiss : ātyā = father

| | | |
|---|---|---|
| Mordvin | : | atai = father |
| Ostiak | : | ata = father |
| Gothic | : | attan = father |
| Latin | : | atta = father |
| Greek | : | atta = a salutation used to old man, equivalent to father. |

அத்தன் = தலைவன்

அத்தன் > அத்தான் = 1. அக்கை கணவன்

2. மனைவி தமையன்

3. கணவன் தமையன்

4. அம்மான் மகன்

5. அத்தை மகன்

அத்தான் = " அத்தன் " என்பதன் விளி

ஒ. நோ : நல்லன் > நல்லான்

( எ-டு : ) " ஆன் என் இறுதி இயற்கை ஆகும் "

( தொல். எழுத்: 4 : 15 )

அத்தன் > ஆத்தன். ( ஆதி நீடல் )

" இவற்றை அறிந்தவனே எம்மால் விரும்பப்பட்ட பிரமாணமான ஆத்தன் "

( நீலகேசி, கடவு, வாழ் : 1. சமய திவாகர வாமன முனிவர் உரை : பக் : 11 )

அத்து + ஐ > அத்தை = 1. தாய் (செ.சொ.பி:பக்: 202)

2. தலைவி (பிங்.)

3. தந்தையுடன் பிறந்தவள்

" கானிடை யத்தைக் குற்ற குற்றமும் "

( கம்பரா, சுந்தர. பாசப் : 44 )

4. மனைவியின் தாய்

" மாமிலை யத்தைனயைத் தோயின் "
( கூர்மபு. பிராயச். 1 )

5. கணவன் தாய்.

" அரசர்க் கத்தையர்க்கு "
( கம்பரா. அயோத். தைல : 39 )

6. தமக்கை.
(செ. சொ. பி. பக்: 202)

7. குருவின் மனைவி
( நாநார்த்த தீபிகை. )

தமிழிய மொழிகளில் : ( DRAVIDIAN )

| | | |
|---|---|---|
| Malayalam | : | atta = mother; mother's sister |
| Kannada | : | atte, atti = mother-in-law<br>attike = elder sister |
| Tulu | : | attè = mother-in-law; aunt |
| Telugu | : | atta = mother-in-law; father's sister<br>maternal uncle's wife |
| Naiki | : | attak = father's sister |
| Gadba | : | ( oll ) : āta = father's sister<br>( s ) atta = father's sister |
| Gondi | : | āti = father's sister |
| Kui | : | ata = grand-mother |

இந்தோ-ஆரிய மொழிகளில் ;

| | | |
|---|---|---|
| Sanskrit | : | attā = mother, mother's sister |
| Prakrit | : | attā = mother, mother-in-law |
| Oriya | : | atā, ātā = term of address to mother<br>and elder sister<br>ātā = father's sister |

Marathi : āt, ātas, ātū
ate, ātēs = father's sister
Sinhalese : attā = maternal grand mother

பிற மொழிகளில் :

சிரியக் : அத்தா
பின்னிசு : ஐத்தி
கோத்திக் : ஐத்தீன்

அத்து + அள் > அத்தள் > அத்தாள் = தாய் (இராட்.)

அத்தாள் > ஆத்தாள் = தாய்

"அப்ப னிரந்துண்ணி யாத்தாள் மலைநீலி"
(தனிப்பா : 1 : 35, 66)

அத்தை > ஆத்தை = தாய். (செ. ப. க. அ. பக் : 225)

அத்தன் > அச்சன் (தகர- சகரத் திரிபு)

(ஒ. நோ : பித்தி > பிச்சி)

அச்சன் = 1. தந்தை

"குடநாட்டார் தந்தையை அச்சனென்றும்...........
வழங்குப" (தொல்.சொல்.எச். 4. நச். உரை)

2. கடவுள்

"அச்ச னின்றனைத்தும் விளைத் தாலென"
(தணிகைப்பு. பிரமன் சிருட்டி: 23)

அச்சன் > அச்சி (பெண்பால்)

அச்சி : 1. தாய்

2. அக்கை

அச்சன் - அச்சி ( தமிழிய மொழிகளில் )

| | |
|---|---|
| Malayalam | : accan = father |
| | : acca = mother |
| | : acci = mother |
| Kannada | : acci = mother |
| | ajja = grand-father |
| | mutt- ajje = great grand father |
| Tulu | : ajje = grand father |
| | ajji = grand mother |
| Kurukh | : ajjos = paternal grand father |
| | ajji = grand mother |
| Manda | : aji = father's mother |
| Brahui | : ajja = grand father |

பிற மொழிகளில் :

| | |
|---|---|
| Marathi | : ājā = grand father |
| Hindi | : ājā = grand father |
| Lappish | : aija = grand father |
| | : attje = grand father |

"அச்சி" - ஒரு பெண்பாலீறு

ஒ. நோ : மருத்துவச்சி
வேட்டுவச்சி

தாயும் தந்தையுமே ஒரு குழந்தைக்கு முதன்மைக் காப்பாளர்கள் ஆவர். எல்லாவுயிர்க்கும் அமைந்திருப்பதைப் போன்று மாந்தவுயிர்க்கும் மூல வேட்கை- பசி ஆகும்! அப் பசியைப் போக்குபவள் தொடக்கப் போதுகளில் தாயே! இயற்கையில்- குழந்தையின் முதற் காப்பாளியும் புரப்பாளியும் அவளே! இரு சார்பினராகிய குழந்தையையும் குழந்தை யின் தாயையும் காக்கும் மேனிலைக் காப்பாளன் தந்தையே!

அனைத்து நிலைகளிலும் இயல்பான மூலக் காப்பாளியராக விளங்கும் இத்தாயையும் தந்தையையும் குழந்தையுள்ளமானது- தனக்குத் துயரம் வந்தபோதும் துன்பம் நேர்ந்தபோதும்- மகிழ்ச்சி ஏற்பட்டபோதும் உடனடியாக- இயல்பாக எண்ணுவது இயற்கை!

ஒரு குழந்தைக்குத் துன்பம் நேரவிருக்கையில் உடனடியாகத் துடித்தோடி விரைய விரைய வந்து காக்க முனையும் தாய் தந்தையரை- அத் துன்ப நேர்ச்சியின்போது அது ‘‘ அம்மா! ’’ என்றோ- ‘‘ அப்பா ” என்றோ இயல்பாக உரத்துக் கூச்சலிட்டு உதவுமாறு வேண்டி நிற்பதும் இயற்கையே! அவர்களும் ஒலி கேட்டவுடன் ஓடோடி வந்து காத்து உதவுவதும் இயல்பே!

இத்தகு வாழ்வியல் சூழல் கூறுகளாலேயே- மரபு மரபாகவே- இவ்விரு முதுகுரவர்களான தாயையும் தந்தையையும் குறித்த— ‘‘ அம்மா, அன்னை, அம்மனை, ஆத்தாள் ’’ — ‘‘ அப்பன் அத்தன் அச்சன் ஐயன் ’’ போன்ற சொற்களை — மாந்தனானவன் தனக்கெனக் காப்பு வேண்டிய போதும், — தன்னின் துயரைத் தீர்க்க அல்லது அதனை அறிவிக்கவேண்டிய கட்டாய இக்கட்டு வந்துற்ற போதும்,— தனக்குற்ற மகிழ்ச்சியை அல்லது விழைவைத் தெரிவிக்க விரும்பிய போதும், — தனக்கேற்பட்ட இரக்கவுணர்வை வெளிப்படக் காட்ட விரும்பிய போதும், — தனக்குற்ற வியப்பைத் தெரிவிக்கும்போதும் அல்லது அதனைக் காணும் போதும் அல்லது உணரும்போதும், தான் வருத்தங் கொளளும்போதும், — தான் இளைப்பாறும்போதும் குறிப்பிட்டு வெளிப்படுத்தும் வழக்கமுடையவன் ஆனான்!

இந்நிலையுடைய வரலாற்றின் வழி — மாந்தன் ஒருவனுக்குத் தன் உள்ளத்தில் தன் தாய் தந்தையரின் மேல் — எத்தகு பாசவுணர்வும் நேயப்பான்மையும் நம்பிக்கைப் பாங்கும் இயல்பாக ஊற்றெழுந்து பாய்ந்து வந்துள்ளன என்பது புலனாகின்றது!

### 1. அம்மா ( அம்மை )

அம்ம : ஒரு வியப்புக் குறிப்பு

‘‘ விதியினார்க் கியான் அம்ம
செய்கின்றதோ ரளவுண்டோ ’’
( கந்தபு. அசுர. அசுரர்தோற் : 14 )

[ மலையாளம் : அம்மே! ]

அம்ம + அம்ம > அம்மம்ம = " அம்ம " என்னும் சொல் இரட்டுறலாக அடுக்கி வந்த மிகு வியபபுக் குறிப்பு.
" அம்மம்ம வெல்ல லெளிதோ " ( தாயு. கச்சி : 4 )

[ மலையாளம் : அம்மம்மா
கன்னடம் : அம்மம்மா ]

அம்ம + அம்ம > அம்மவம்ம : [ காண்க : அம்மம்ம. ]

" அம்மவம்ம கடவுண் மகனான
நின்னா லறிவுற்றேன் " [ஞானவா. சிகித்து 130]

அம்மா : (1) ஒரு வியப்புக் குறிப்பு
" பொன்னிக ரிதனை யொக்கு மென்பது
புல்லிதம்மா "
[ கம்பரா. சுந்தர. கடல்தாவு : 92 ]

(2) ஓர் இரக்கக் குறிப்பு
" வெறும் பொருளதம்மா "
( சீவக : 2622 )

(3) ஓர் மகிழ்ச்சிக் குறிப்பு
" அம்மா வென் றுகந்தழைக்கு மார்வச் சொல் "
( திவ். பெருமாள்தி : 9 : 6 )

(4) ஒரு துயரக் குறிப்பு

(5) ஒரு வருத்தக் குறிப்பு

[ கன்னடம் : அம்மா ]

அம்மா + ஐயா > அம்மைய்யா

[ துளு : அம்மையா = துயரம் வலி முதலியவற்றிற்கான குறிப்பு ]

தெலுங்கு : அம்மா; அமா = வியப்புக் குறிப்புச் சொற்கள்

அம்ம + ஓ > அம்மோ = ஓர் இரக்கக் குறிப்புச் சொல்
( நாமதீப )

[ மலையாளம் : அம்மோ ]

[ பிராகிருதம் : அம்மோ : (நாடகங்களில்) வியப்புக் குறிப்பு ]

[ அம்ம + ஏ > அம்மவே > அம்மகே ]

Prakrit : ammahe = interjection of surprise ( Dramas )

அம்ம + ஓ > அம்மவோ = ஓர் இரக்கக் குறிப்பு
" அம்மவோ விதியே யென்னும் ".
( கந்தபு. யுத்த. அக்கினி : 194 )

அம்மவோ > அம்மகோ ( வகர ககரத் திரிபு )
" அம்மகோ வெனும் விழுமழும் "
( மதுரைக் கலம் : 15 )

அம்மா + அடி > அம்மாடி

(1) வியப்புக் குறிப்பு
(2) அச்சக் குறிப்பு
(3) இரக்கக் குறிப்பு
(4) நேர்வுக் குறிப்பு
(5) இளைப்பாறற் குறிப்பு

அம்மா ( விளி ) + அடி ( பெண்பால் விளி )

அம்மை + ஓ > அம்மையோ = ஒரு வியப்புக் குறிப்பு
" அன்னையோ வென்றது அம்மையோவென ஒரு வியப்பு "
[ கலித் : 85 : 29. நச். உரை ]

அம்மா + ஆச்சி > அம்மாச்சி = 1. தாயைப் பெற்ற பாட்டி
( தஞ்சை வழக்கு. )

2. தாய் ( சங். அக. )

அம்மா + ஆத்தாள் > அம்மாத்தாள் = தாயைப் பெற்ற பாட்டி

அம்மா + ஆய் > அம்மாய் = தாயைப் பெற்ற பாட்டி

அம்மா + அள் > அம்மாள் = தாய்

## 2. அம்மனை

அம்மா + அன்னாய் > அம்மான்னாய் > அம்மானை > அம்மனை

அம்மனை + ஓ > அம்மனையோ = ஒரு துயரக் குறிப்பு

"அம்மனை யோவெனாத் துண்ணெஞ்சின ளாய்த் துடித்து" ( சீவக. : 760 )

அம்ம + அன்னோ > அம்மன்னோ > அம்மனோ = ஒரு துயரக் குறிப்பு

"வழா நெடுந் துன்பத்த ளென்றிரங்கார் அம்மனோ" ( திவ். இயற். திருவிருத் : 37 )

( அன்னை + ஓ > அன்னையோ > அன்னோ )

அம்ம + அன்னே > அம்மன்னே > அம்மனே = ஒரு வியப்புக் குறிப்பு

"உடைந்ததுவு மாய்ச்சி பான் மத்துக்கே யம்மனே" ( திவ். இயற் : 3 : 28 )

( அன்னை + ஏ > அன்னையே > அன்னே )

## 3. அன்னை

அன்னை + ஓ > அன்னையோ > அன்னோ = ஓர் இரக்கக் குறிப்பு

(1) "பல்கால் முயங்கினள் மன்னே அன்னோ" ( அகம் : 49 : 9 )

(2) அன்னோ உய்ந்தனசல்லரிவ ளுடற்றி யோரே ''
(புறம் : 100 : 8-9)

[ மே. கா : அகம் : 192 : 2 ; 263 : 10 ; 272 : 15 ;
330- 6 ; 358 : 10
புறம் : 336 : 7 ; 345 :18
நற் : 197 , 3 ; 227 : 4 ; 255 : 6 ; 326 : 7
குறுந் : 161 : 4 ]

'' அன்னீற் றோவும் அன்ன பிறவுங்
குறிப் பொடு கொள்ளும் '' [ தொல். இடை : 34 ]
[ அன்னீற்றோ = அன் + (ஈற்று) + ஓ
= அன் + (ன்) + ஓ > அன்னோ. ]

## 4. ஆத்தாள்

அத்தள் = தாய்
அத்தள் > அத்தாள் > ஆத்தாள் = தாய்

அத்து + இ > அத்தி = தாய்
அடி + அத்தி > அடியத்தி > அடியாத்தி
(1) வியப்புக் குறிப்பு
(2) இரக்கக் குறிப்பு

அடியாத்தி + ஏ > அடியாத்தியே > அடியாத்தே
(1) வியப்புக் குறிப்பு
(2) இரக்கக் குறிப்பு

## 5. அப்பன்

அப்பி = வியப்புக் குறிப்புச் சொல். (சே. சொ. பி : பக் : 231)
[ கன்னடம். தெலுங்கு. துளு. : அப்ப ]

அப்ப + அப்ப > அப்பப்ப = வியப்பு, இரக்கம், துயரம் முதலிய வற்றின் குறிப்பு
[ கன்னடம், தெலுங்கு. படகம். துளு : அப்பப்ப ]

அப்ப + அப்பா > அப்பப்பா = [மேற்குறிப்பைக் காண்க : அப்பப்ப]
[ கன்னடம், மலையாளம் : அப்பப்பா ]

அப்பா + அத்தா > அப்பாத்தா > அப்பத்தா
[ மலையாளம் : அப்பத்தா ]

அப்பா + அடா > அப்பாடா : இளைப்பாறல்- வியப்பு- நோவு ஆகிய குறிப்புகளை உணர்த்துஞ் சொல்.

அப்பாடா > அப்படா: [ மேற்குறிப்பைக் காண்க : அப்பாடா ]

அப்பா + அடி > அப்பாடி.

## 6. அத்தன்

அத்தன் + அச்சி > அத்தச்சி > அத்தாச்சி =
1. அண்ணி ; அண்ணன் மனைவி
2. நாத்தூணாள் ; கணவனின் உடன்பிறந்தாள்

அத்து + அன் > அத்தன் = அப்பன் ; தலைவன்

அத்து + இ > அத்தி = 1. அம்மை 2. அக்கை
மலையாளம் : அத்திக
கன்னடம் : அத்திகெ
தெலுங்கு : அத்தி = தாய்
கூய் : அத = பாட்டி
பிராகுவி : அத்தி = தாய்

அத்து + ஐ > அத்தை = தாய் ; தந்தையுடன் பிறந்தாள்.
பிராகிருதம் : அத்தா.

அத்தி : ஒரு பெண்பாலீறு
(எ-டு) குறத்தி ; மறத்தி

அத்து + ஐ > அத்தை
அத்தை + அச்சி > அத்தையச்சி
அத்தையச்சி > அத்தச்சி
அத்தச்சி + ஆர் > அத்தச்சியார்
அத்தச்சியார் > அத்தைசார்

அத்தைசார் = அத்தை ; தந்தையுடன் பிறந்தாள்.

அத்தை+பாட்டி > அத்தைப்பாட்டி = பாட்டனுடன் பிறந்தாள்.
" அத்தைப் பாட்டி போல அளந்து கொட்டுகிறாள்
பெரிதாக ..." (பழமொழி)

அத்தன் > அத்த(ன்) + ஓ > அத்தோ
அத்தோ = வியப்பு- இரக்கம் முதலியவற்றை உணர்த்துங் குறிப்பிடைச் சொல் (பிங்)

அத்தோ > அந்தோ = (மெலித்தல் திரிபு)
இரக்கக் குறிப்புச் சொல்

(1) " அந்தோ வளியேன் வந்தனென் மன்ற "
(புறம் : 238 : 12)

(2) " அந்தோ வெந்தை யடையாப் பேரில் "
(புறம் : 261 : 1)

[மே. கா : நற் : 324 : 1; கலி : 143 : 18; நாலடி : 394 : 3]
" அந்தீற் றோவும் அன்னீற் றோவும்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும் "
(தொல். இடை : 34)

[சேனாவரையர் குறிப்பு : " அந்தீற் றோவும் அன்னீற்றோவு மாவன ... " அந்தோ " " அன்னோ "- என்பன ... அடுக்கியும் அடுக்காதும் இரங்கற் குறிப்பு வெளிப்படுக்கும் ]

அந்தோ : வியப்புருக்கக் குறிப்புச் சொல்
" அந்தோ வென்னாருயிரே
யரசே யருள் " (திவ். பெரியதி. 7 : 2 : 6)

"அந்தோ"- என்பது, "அத்தோ" எனத் தந்தையின் முறைப் பெயர்டிப்படையில் உருவான குறிப்புச் சொல்லே என்பதை அறியாத உரையாசிரியர்- தெய்வச் சிலையார் தொல்காப்பிய எச்சவியலில் வரும் 396-ஆம் நூற்பாவுக்கான விளக்கவுரைப் பகுதியுள்- " அந்தோ " என்பது சிங்களவர் ஐயோ என்பதற்கிட்ட பெயர் "- எனக் குறிப்பிட்டுவிட்டதை அடிப்படையாகக் கொண்டு சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதியும் பக்கம் 84- இல் அச் சொல்லுக்கு விளக்கமாக— "regarded as a sinhalese word" என்றவாறு தவறாக குறித்துள்ளது. நன்னூலுக்குக் காண்டி

கையுரை வரைந்த யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலர் அவர்களும்- இத் தவற்றையே 273- ஆம் நூற்பாவுக்கான விளக்கக் குறிப்பிறுதியில் முன்னீடாகப் பதித்துள்ளார்.

அத்தி > அந்தி : ( மெலித்தல் திரிபு ) அக்கை (சங். அக.)
[ மலையாளம் : அந்தி
தெலுங்கு : அந்திக ]

அத்தன் = அப்பன்
அத்தா > அந்தா = (1.) ஒரு வியப்புக் குறிப்பு
''அந்தா விவ ளயிராணி'' (கந்தபு. அசுர.அசமுகிப்: 17)
(2.) ஒரு மகிழ்ச்சிக் குறிப்பு
''அந்தா வுய்ந்தேன்'' (கந்தபு. அசுர. அசுரர்தோற்:1)

## 7. அச்சன்

அத்தன் > அச்சன் ( தசர சகரத் திரிபு )

அப்பா + அச்சன் > அப்பாச்சன் > அப்பச்சன் =
(1) தந்தையின் தந்தை
(2) தந்தை ( நாஞ். வழக். )

அப்பா + அச்சி > அப்பாச்சி > அப்பச்சி
(1) பாட்டன் (பள்ளர் வழக்கு)
(2) அப்பன் ( செட்டிநாட்டு வழக்கு )
(3) பள்ளர்- மறவரை விளிக்கும் மதிப்புறவுப் பெயர்
[ அச்சி : மதிப்புறவுப் பெயரீறு ( ஆண்பால்]

ஒ. நோ : அண்ணா + அச்சி > அண்ணாச்சி

அத்தன் > அத்த (விளி)
( அத்தன் = மதிப்புரவுப் பெயரீறு )
அண்ணா + அத்த > அண்ணாத்த!
[ அண்ணாத்த > அண்ணாத்தை (பெயர்)
= அண்ணன் ; மூத்தவன் ]

அத்தோ > அச்சோ: (1) ஓர் இரக்கக் குறிப்புச் சொல்.

" அச்சோ எனப் பல் இமையோரை
யீண்டுச் சிறைவைத்த பாவம் "

(கந்தபு. அவைபுகு : 43 )

(2) ஒரு வியப்பு மொழி

" அச்சோ ஒருவ ரழகியவா "

(திவ். பெரியதி : 9 : 2 : 1)

அச்சோப் பருவம்: தாய்- குழந்தையை அணைக்கவேண்டி "அச்சோ-அச்சோ!" என்று அழைக்கும் பருவம்.

" ஆரத் தழுவாய் வந் தச்சோ அச்சோ "

(திவ். பெரியாழ் : 1 : 8 :6 )

அச்சோ பெண்கள் : விளக்கைச் சுற்றிவந்தவாறு கைகொட்டிப் பாடிக் கொண்டு மகளிர் ஆடும் ஆட்டம்.

(பிரா. வழக்.)

[ மலையாளம் : அச்சோ : வியப்பு- நோவு முதலியவற்றின் போது கூறும் குறிப்புச் சொல் ]

## 8. ஐயன்

ஐயன் = தந்தை

ஐய + ஓ > ஐயவோ > ஐயோ

(1) ஓர் அரற்றல் குறிப்பு

"ஐயோ வெனின் யான் புலியஞ் சுவலே" (புறம்:2551:)

[ஐயோவெனின் = ஐயோவென்று அரற்றுவேனாயின்...]

(2) துயரக் குறிப்பு

"ஐயோ விதற்கோ வருந்தவமுன் செய்தாயே"

[கந்தபு. அசுரேந் : 7 ]

(3) வியப்புக் குறிப்பு (சூடா)

(4) இரக்கக் குறிப்பு ( சீவக: 2622. உரை )

ஐயோ + ஐயோ > ஐயையோ : (1) இரக்கக் குறிப்பு
(2) துயரக் குறிப்பு

| | |
|---|---|
| Malayalam | : ayyā : Interjection of derision<br>ayyō, ayyāyō : Interjection of pain or grief. |
| Kodagu | : aya : Exclamation of surprise or grief.<br>aya : Exclamation of grief. |
| Toda | : eya : Exclamation of surprise. |
| Kannada | : ayyō, ayyayō, ayyayyē : Interjection of expression of grief Expression of astonishment ; Expression of compassion. |
| Tulu | : ayyō, ayyayō : Interjection of grief, annoyance, or pain |
| Telugu | : ayyo, ayyō, ayyayō, ayyayyō, ayayo : Interjection denoting sorrow, lamentation, pity, pain etc |
| Kurukh | : ayō : Exclamation of pain or surprise. |
| Malto | : aya, ayyi, ayyu : O my! wonder, joy, woe |
| Sanskrit | : aye ; Exclamation of surprise. |

ஐய : (1) ஒரு வியப்புக் குறிப்பு

"ஐய விதென்னதொரு 'அற்புத' மாயையை"
(திருவிளை. விடை : 23)

(2) இரக்கக் குறிப்பு

"ஆதுலர் ஆனீர் அந்தோ ஐய என் றழுது"
( திருவிளை. மாமனாக 23 )

ஐய + ஓ > ஐயவோ > ஐயகோ = இரக்கம் துயரம் முதலிய வற்றின் குறிப்பு

"ஐயகோ வென் றலம்வருவாள்" (வெங்கைக்கோ: 246)

| | |
|---|---|
| Kui | : āige, aigo, āike, āiko : Interjection indicating annoyance, impatience or disgust. |
| Malto | : ayyoke = Alas! |



## பிழை- திருத்தம்

| பக் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 31 | 23 | என்றும் | என்னும் |
| 37 | 2 | அதற்கேயுறிய | அதற்கேயுரிய |
| 64 | 14 | ஒதுக்கியுள்ளன | ஒதுக்கியுள்ளது. |
| 69 | 12 | நூற்பாவுக்கு | நூற்பாவுக்குத் |
| 72 | 27 | Pādasi | Pādari |
| 87 | 16 | கீழ் குறித்ததற்கும் | கீழ்க் குறித்ததற்கும் |
| 90 | 2 | Aimal | Aimol |
| | 21 | Chitrāli- (இச் சொற்குக் கீழ் இடைவெளி கொள்க!) | |
| 96 | 20 | Pali (இச் சொற்கு மேல் இடைவெளி கொள்க!) | |
| 97 | 10 | Tanchū | Tauchū |
| 99 | 13 | திரிபுற்று | திரிபுற்றுப் |
| 100 | 14 | பெரியுபு | பெரியபு |
| | 22 | பெரியுபு | பெரியபு |
| 104 | 26 | Lauten-yao | Lanten-yao |
| 107 | 26 | Hallam | Hallām |
| | 28 | Aimal | Aimol |
| | 30 | Taungoe | Taungoa |
| 111 | 2 | Gatwāli | Gārwāli |
| 115 | 8 | ரேதன்றுவனவாயுள்ளன | தோன்றுவனவாயுள்ளன |
| 120 | 13 | எம்ன் | எம்பி |
| 124 | 17 | ஆகர | ஆகார |
| 128 | 16 | Braj | Braj bākā |
| | ,, | bākā | (நீக்குக!) |
| | 23 | Pashai (இச் சொற்குக் கீழ் இடைவெளி கொள்க!) | |
| 144 | 8 | அறாவழக்குடைமையை | அறாவழக்குடைமையைக் |
| 151 | 17 | ஓர் | ஒரு |
| 152 | 8 | ஓர் | ஓர் |



# அருளியின் நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | நிறைந்தேன் [பாத்தொகை] | (1979) | - அச்சில் |
| 2. | தகுதி [மொழியாய்வுக்கட்டுரை] | (1979) | - அச்சில் |
| 3. | சிங்கள அமர்க்களம் | (1981) | - 5-00 |
| 4. | இவை தமிழல்ல!... | (1983) | - 15-00 |
| 5. | இந்திய அரசே இன்னுமா உறக்கம்? | (1983) | - 5-00 |
| 6. | தமிழ் சமற்கிருதம் மற்றும் பிற இந்திய மொழிகளின் ஆராய்ச்சி நிறுவனத்தில் அருளி ஆற்றிய மொழியியல் உரைகள் | (1985) | முதலாம் தொகுதி |
| 7. | ,, ,, | | இரண்டாம் தொகுதி |
| 8. | ,, ,, | | மூன்றாம் தொகுதி |
| 9. | ,, ,, | | நான்காம் தொகுதி |
| 10. | ,, ,, | | ஐந்தாம் தொகுதி |
| | ஐந்து தொகுதிகளும் : | | 100-00 |
| 11. | இரு-வானொலி உரைகள் | | 5-00 |
| 12. | பெற்றோரைப்பற்றி!... | | 25-00 |

## வரவுள்ளன :

1. என் தாய்த் தமிழின் எச்சங்கள்
2. Original Origins
3. தமிழ்த்தாயின் துளுமகள்
4. மாயம் - மந்திரம்
5. குறளும் - பொருளும்
6. சகரச் சக்கரம்
7. யா
8. சீனம் - தமிழ் அகராதி

MK Color Process, Madras-14. Phone : 848311